உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவ ஜயம்

# ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் ஜெயந்தி விழா மலர் - 2015




வெளியீடு:

ஸ்ரீ ஹரிஹர ஸேவா ட்ரஸ்ட், நெரூர்

ஸ்ரீ ஸ்ரீ வித்யா ந்ருஸிம்ஹ ஆஸ்ரமம், நெரூர்




ஸ்ரீ ராமனால் வழிபடப்பட்ட ஸ்ரீ ராமநாதரின் ஆலையம்

சிவமயம்
ஶ்ரீமஹாதேவ ஜயம்

## ஶ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் ஜெயந்தி விழா மலர் - 2015

ஶ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அருளிய

# ஶ்ரீ இராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்
# மற்றும்
# ஶ்ரீ பாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம்
# உள்ளுறைச் சுருக்கம்

(வடமொழி மூலம், நூலாசிரியரே அருளிய உரையின் சுருக்கம் (தமிழில்)
மற்றும் பதிப்புரை விளக்கங்களுடன்)

பதிப்பாசிரியர்:

**பரமசாம்பவ திருவையாறு. வே. இரமணன்**

29-09-2015 அன்று ஶ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் ஜெயந்தி விழாவில்
சிதம்பரம் ஶ்ரீமத் ஆனந்த நடராஜராஜமூர்த்தி சன்னிதியில்
நெரூர் ஶ்ரீ ஶ்ரீ வித்யா ஶங்கர ஸரஸ்வதி ஸ்வாமிகளால்
வெளியிடப்பட்டது.

வெளியீடு:

**ஶ்ரீ ஹரிஹர ஸேவா ட்ரஸ்ட், நெரூர்**
**ஶ்ரீ ஶ்ரீ வித்யா ந்ருஸிம்ஹ ஆஸ்ரமம், நெரூர்**

ஶ்ரீ:

|| சிவ சிதம்பரம் ||

## ஆசி உரை

"வித்யாஸு ஶ்ருதிருத்க்ருஷ்டா" என்று வித்யா ஸ்தானங்களில் ஶ்ருதியே ப்ரதானம் - ஶ்ருதிப்ரமாணம், ஶ்ருத்யேக ப்ரமாணம் என்பதே முடிவு. அந்த வேதங்களின் அநுஸாரியே ஸ்ம்ருதிகள். ஶ்ருதி ஸ்ம்ருதிகளின் தாத்பர்யங்களே உபப்ரஹ்மணமான புராணங்களில் சொல்லப்படுகின்றன. ஶ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்களின் ஏக கண்டமான அபிப்ராயம் பரப்ரஹ்மமான பரமேஶ்வரனிடமே உள்ளது. இந்த ஸத்யத்தைப் பண்டிதர்கள் முதல் பாமரர்கள் வரை ஹ்ருதயபூர்வமாக அநுபவித்து உணரும்படி ஹேது ப்ரமாணங்களுடன் அனேக க்ரந்தங்களில் ப்ரகாசப்படுத்திய பெருமை ஶ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் என்ற மகானையே சேரும்.

இந்த லக்ஷ்யத்தோடு தீக்ஷிதர் செய்த நூல்களில் ஶ்ரீமத் ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரமும், ஶ்ரீ பாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரமும் மிகவும் முக்கியமானவை. ஶ்ரீ விஷ்ணுவின் அவதாரங்களில் ஶ்ரீ ராமனும், ஶ்ரீ க்ருஷ்ணனுமே ஸர்வ ஜனங்களாலும் மிகவும் கொண்டாடப் படுபவர்கள்; இந்த அவதாரங்களின் மகிமையே மேற்சொன்ன பரம இதிகாஸங்களால் வெளிப்படுவது. ஶ்ரீ விஷ்ணுவானவர் தாம் எடுத்த அவதாரங்களில் லோகோபகாரமான க்ருத்யங்களைப் புரிந்து அஸாதாரணமான கீர்த்தியை அடைவார் என்று பரமேஶ்வரனால் அநுக்ரஹிக்கப்பட்டவர். இந்த வரத்திற்கேற்ப, ஶ்ரீ ராம, க்ருஷ்ண அவதாரங்களில் அவர் தமது சொந்த ஸ்வாமியாக ஶ்ரீ பரமேஶ்வரனையே பூசித்து அவர் அருளால் க்ருதக்ருத்யர் ஆனார் என்ற ரஹஸ்யத்தைத் தக்க ப்ரமாணங்களுடன் தீக்ஷிதர் இந்த இரண்டு க்ரந்தங்களிலும் நிரூபித்துள்ளார்.

இந்த அரிய க்ரந்தங்களை லோகோபகாரமாக 1988 இல் சென்னை, மேல மாம்பலம், பரமசாம்பவ ஆங்கீரஸ. S. வேங்கடேச சர்மா அவர்கள், பாஷ்ய பாவக்ஞ, ப்ரம்ஹஶ்ரீ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகளின் துணைகொண்டு வெளியிட்டார்கள்.

ப்ரதி வருஷம் நாம் அனுஷ்டிக்கும் ஶ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரின் ஜயந்தி மஹோத்ஸவத்தில், இவ் வருஷ மஹோத்ஸவ வெளியீடாக, மேற்படி நூலினைத் தழுவி, இந்த நூலினை வெளியிடுகிறோம்.

இந்நூலின் பதிப்பாசிரியரான பரம சாம்பவ திருவையாறு வே. இரமணன் அவர்கள் ஸதாசார ஸம்பந்நரும், வேதாந்த க்ரந்தங்களில் பூர்ண பரிச்சயமும், திருமுறைகளிலே பரம காஷ்டை உடையவரும் ஆவார். அவர்கள் இந்நூலுக்குச் சாஸ்த்ர ஸம்மதமான திருமுறை மேற்கோள்களுடன் கொடுத்துள்ளார்கள். அவர்கள் இதே போன்று வரும் ஸம்வத்ஸரங்களிலும் ஸ்ரீ தீக்ஷிதரின் க்ரந்தங்களை ப்ரகாசப் படுத்துவார்கள்.

இந்த நூலினைக் குறுகிய கால அவஸரத்தில் இரு மொழிகளிலும் கணினி அச்சுக் கோர்த்து நல்ல முறையில் வடிவமைத்து வெளியிடப் பெரிதும் உழைத்தவர் கரூர் அத்வைத ஸபாவின் காரியதரிசியாகிய சிவபக்த ஸ்ரீ இரா. பாலகிருஷ்ணன் அவர்கள். அவர்களுக்கு ஸ்ரீ சம்பு பரிபூரண க்ருபையைச் செய்ய ப்ரார்த்திக்கிறோம்.

இந்த நூல் எல்லாச் சமயத்தாருக்கும் பொதுவான நூல். இந் நூலினை எல்லா ஜனங்களும் ஸதய ஹ்ருதயத்துடன் க்ரஹித்து சிவக்ருபைக்குப் பாத்திரர் ஆக வேண்டும் என ஆசீர்வதிக்கிறோம்.

கன்யா சுக்ல ஸப்தமி,
20-09-2015,
நெரூர்.
சேந்தமங்கலம் (முகாம்).

குருக்ருபாபிலாஷி
பரமசாம்பவ
ஸ்ரீ ஸ்ரீ வித்யா ஶங்கர ஸரஸ்வதி

## பதிப்புரை

திருச்சிற்றம்பலம்

செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடும்
சேது பந்தனம் செய்து, சென்று புக்கு,
பொங்கு போர் பல செய்து, புகலால் வென்ற
போர் அரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொரு தம் திருவிரலால் இறையே ஊன்றி
அடர்த்து, அவற்கே அருள்புரிந்த அடிகள், இந்நாள்
வங்கம்மலி கடல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னினாரே

- திருநாவுக்கரசர்

ஸர்வதோமுகமான ஞானம் (பன்முக அறிவு) கொண்டவர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள். பலவகைச் சித்தாந்தங்களைப் பின்பற்றுவோருக்கும் பயன்படும்படியாக அவரவர் சமய நூல்களை விளக்கித் தீக்ஷிதர் எழுதிய நூல்கள் உண்டு. அந்நூல் கருத்துக்களை எல்லாம் தம் சொந்த, ஸம்மதமான, அபிப்ராயங்களாகத் தீக்ஷிதர் கொண்டிருந்திருக்க வாய்ப்பில்லை.

மாறாக, ஸ்ரீ இராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம் மற்றும் ஸ்ரீ பாரத தாத்பர்ய ஸங்க்ரஹ ஸ்தோத்ரம் போன்ற நூல்கள், எல்லோருக்கும் பொதுவான பெரிய இதிகாசங்களாகிய இவ்வகை நூல்களின் மெய்ப்பொருளை ஐயம் திரிபு அறத் தடஸ்தமாக, ஸாதுக்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற மேலான அவ்யாஜ கருணையினால் தீக்ஷிதர் அருளியுள்ள காரணத்தால் இவ்விரு நூல்களிலும் தாம் கூறும் கருத்துகளைத் தீக்ஷிதர் நம்பி வாழ்ந்திருக்கிறார் என நான் உறுதியாக எண்ணுகிறேன். சிறிய நூல்களாயினும் இவற்றின் பெருமைக்கு ஆசிரியரின் பற்று (involvement) போதுமான சான்றாகும்.

இராமாயண தாத்பர்யம் 25 சுலோகங்களாலும், பாரத தாத்பர்யம் 20 சுலோகங்களாலும் அமைந்துள்ளன. இரண்டிற்கும் ப்ரமாணங்கள் பல காட்டிப் போதுமான அளவிற்கு விரிவான உரையினையும் தீக்ஷிதர் அவர்களே அருளியுள்ளார்.

இப்பதிப்பில், இராமாயண தாத்பர்யம் மூலமும், பாடலின் தமிழ்ப் பொழிப்பும், நூல் ஆசிரியரின் வடமொழி உரையின் தமிழ்ச் சுருக்கமும் (உரைச் சுருக்கம் [உ-சு]), பதிப்பாசிரியனின் சொந்த விளக்கங்களும் (பதிப்புரை விளக்கம் [ப-வி]) தரப்பட்டுள்ளன.

பாரத தாத்பர்யம் மூலமும், நூலாசிரியரின் நீண்ட வடமொழி உரையின் தமிழ்ச் சுருக்கம் தொடர்ந்த பொழிப்பாகவும், தேவைப்படும் சில பதிப்புரை விளக்கங்களும் தரப்பட்டுள்ளன. பதிப்புரை விளக்கத்தில் மட்டும், பன்னிரு சைவத் திருமுறைகளிலிருந்து காட்டப்படும் மேற்கோள்கள் (திருமுறை எண் - பதிக எண் - பாடல் எண்) என்ற முறையில் எண்ணிடப்பட்டுள்ளன.

இவ்வரிய நூல்களோடு என்னைத் தொடர்பு படுத்திய குருவருளைக் கும்பிட்டும், துணைபுரியும் திருவருளைச் சிந்தித்தும், தீக்ஷிதர் திருவடிகளை வந்திக்கிறேன்.

சிதம்பரம், திருவையாறு. வே. இரமணன்
14-09-2015.

# பொருளடக்கம்



ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர்

# श्री रामायण तात्पर्य सङ्ग्रहस्तोत्रम् ॥
# ஸ்ரீ ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹஸ்தோத்ரம் ||

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயண உள்ளுறை

திருச்சிற்றம்பலம்

மான் அன நோக்கி வைதேவி தன்னை ஒரு மாயையால்
கானதில் வவ்விய கார் அரக்கன் உயிர் செற்றவன்;
ஈனமிலாப் புகழ் அண்ணல் செய்த இராமேச்சரம்
ஞானமும் நற்பொருள் ஆகி நின்றதொரு நன்மையே

- திருஞானசம்பந்தர்

### ஶிவோத்கர்ஷபுத்தி: ஶிவபக்தி:

[உ-சு] அவதாரிகை: வால்மீகி முனிவரின் சிவபக்தி இராமாயண காவியத்துள் காணப்படும் கவிக்கூற்றுகளாலும், கதாநாயகனாகிய இராமபிரான் என்னும் உத்தம புருஷனின் கூற்றுகளாலும் உறுதியாகும்.

वाल्मीकिरादिकविराडखिलार्थदर्शी
साक्षाद्विरिञ्च इव संप्रतिपन्नभावः ।
विश्वेश विष्णुमधिकृत्य कृते प्रबन्धे
व्यक्त्या तवैव निबबन्ध परं परत्वम् ॥ १ ॥

வால்மீகிராதிகவிராட் அகிலார்த்ததர்சீ
ஸாக்ஷாத்விரிஞ்ச இவ ஸம்ப்ரதிபன்னபாவ: |
விச்வேச விஷ்ணுமதிக்ருத்ய க்ருதே ப்ரபந்தே
வ்யக்த்யா தவைவ நிபபந்த பரம் பரத்வம் || 1 ||

வால்மீகி என்னும் முதன்மை வாய்ந்த கவியரசர், பிரமனைப் போல் பொருள் அனைத்தையும் உணர்ந்தவர். அவர் திருமாலின் அவதாரமாகிய இராமனைப் பாடுகின்ற காவியத்தில், உள்ளுறை என்னும் மேலான உத்தியினால் சிவபெருமானின் பெருமையையே அமைத்துக் காட்டியிருக்கிறார்.

[ப-வி] 'உள்ளுறை' (வ்யஞ்ஜனை) என்பது ஒரு சொல் ஆற்றல் (சப்த சக்தி); தான் எடுத்துக் கொண்ட புறப்பொருளைக் கொண்டே அதனிடையே தன்

உள்ளக் கிடை (எண்ணம்) தோன்றும்படி (த்வனி) கவிஞன் ஆங்காங்கு அமைத்தல் உத்தம காவியத்தின் இலக்கணம் ஆகும்.

### தேவதேவன் மகாதேவன்

[உ-சு] சிவபிரானே எல்லாத் தேவராலும் வணங்கப்படும் மகாதேவர் என்பதை, அகத்தியரை அவ் எல்லாத் தேவரும் வழிபடுவதைக் காட்டியும், அகத்தியருக்கு மகாதேவரே வழிபடு கடவுள் என்பதை உணர்த்தியும் நிறுவுதல்:-

रामायणे हि कलशप्रभवाश्रमस्था
देवादयोऽपि तमुपासत इत्युदीर्य ।
स्थानानि चात्र मधुजिन्मघवन्मुखानां
तस्याश्रमे निगदितानि न ते कपर्दिन् ॥ २ ॥

ராமாயணே ஹி கலசப்ரபவாச்ரமஸ்தா
தேவாதயோऽபி தமுபாஸத இத்யுதீர்ய |
ஸ்தாநானி சாத்ர மதுஜிந்மகவன்முகாநாம்
தஸ்யாச்ரமே நிகதிதாநி ந தே கபர்தின் || 2 ||

கும்பமுனி ஆகிய அகத்தியரின் ஆசிரமத்தில் வந்து உறையும் தேவர்களும் அவரை வழிபடுகிறார்கள் என்று இராமபிரானும் அதனைத் தொடர்ந்து அவரை வழிபடும் தேவர்கள் இவரிவர் என்பதைச் சுட்ட, வால்மீகி முனிவர், திருமால், இந்திரன் முதலியோரின் இருக்கைகளையும் குறிக்கின்றனரே அன்றிச் சிவபிரான் அங்கு வந்து செல்வதாக இராமயணத்தில் கூறப்படவில்லை.

[உ-சு] இலக்குவனை நோக்கி அகத்தியர் ஆசிரமத்தைக் குறித்து இராமன் கூறுவது: "இங்கு தேவர்கள், சித்தர்கள், மகரிஷிகள் யாவரும் ஆஹாரநியமத்துடன் கூடிய அகத்தியரை எப்போதும் வழிபடுகிறார்கள். தேவர்கள், யக்ஷர்கள், நாகர்கள், பன்னகர்கள் ஆகியோர் அறம் செய்ய விரும்பியவராய் ஆகாரநியமத்துடன் இங்கு வசிக்கிறார்கள்."

இராமலக்ஷ்மணர்கள் அகஸ்த்யாசிரமத்தில் நுழைந்த பிறகு, வால்மீகி முனிவரின் கூற்று: "அங்கு, பிரம்மா, அக்னி, விஷ்ணு, இந்திரன், சூரியன், சோமன், குபேரன், தாதா, விதாதா, வாயு, வருணன், காயத்ரீ, வசுக்கள், நாகராஜனான அனந்தன், கார்த்திகேயன், தருமன் ஆகியோரின் இருக்கைகளை இராமன் பார்க்கிறார்."

அகத்தியரைச் சிவபெருமானைத் தவிர பிற தெய்வங்கள் எல்லாம் வழிபடும் என்பதற்கு வேறு பிரமாணங்கள்:

உத்தர இராமாயணத்தில், சம்புகனை இராமன் கொன்றபின்னர், இராமனைக் காணச் சுவர்கத்திலிருந்து விமானங்களில் வந்த தேவர்கள் மகாத்மாவான அகத்தியரைத் தரிசிப்போம் என்று கூறிக்கொண்டு அங்கு சென்று அவரை வணங்குகிறார்கள்.

மேலும் அவ்விடம் வந்திருந்த சுவேதன் என்னும் அரசன் 'பசி, தாகம்' என்னும் நோய்க்கு மருந்து யாது? என்று கேட்க, 'தேவர்களையே காக்கும் வல்லமை கொண்ட அகத்தியர் உன்னைக் காப்பார்!' என்றும் கூறப்பட்டுள்ளது.

[ப-வி]

நமோ ருசாய ப்ராம்ஹயே |
ருசம் ப்ராம்ஹம் ஜனயந்த: |
தேவா அக்ரே ததப்ருவன் |
யஸ்த்வைவம் ப்ராம்ஹணோ வித்யாத் |
தஸ்ய தேவா அஸன்வஶே ||

- புருஷ சூக்தம்

"பிரமஞானமாகிய ஒளிக்கு வணக்கம்; இவ்வொளியை அடையப் பெற்றோனைக் குறித்து முன்னதாகத் தேவர்கள் கூறியதாவது 'இப்பிரமஞானிக்கு தேவர்கள் வசமாகிறார்கள்' என்பதாம்" என்று வேதத்திலும் கூறப்பட்டுள்ளதால் சிவஞானியர்க்குத் தேவர்கள் தொண்டு செய்கிறார்கள் என்பது தெளிவு.

நம்பி ஆரூரர் வெள்ளையானை இவர்ந்து திருக்கயிலைக்கு எழுந்தருளிய காலத்து,

'வான் எனை வந்து எதிர்கொள்ள மத்தயானை அருள் புரிந்து'
'வானை மதித்த (அ)மரர் வலம் செய்து, எனை ஏற வைக்க'
'அமரர் எல்லாம் சூழ அருள் புரிந்து'
'விண் உலகத்தவர்கள் விரும்ப வெள்ளையானையின் மேல்'
'வான நன்நாடர் முன்னே துஞ்சுதல் மாற்றுவித்து'
'அலைகடல் ஆல் அரையன் அலர் கொண்டு முன்வந்திறைஞ்ச'
'வரம்மலி வாணன் வந்து வழிதந்து'
'இந்திரன், மால், பிரமன், எழிலார்மிகு தேவர் எல்லாம் வந்து எதிர்கொள்ள'
'ஆழிகடல் அரையா! அஞ்சையப்பர்க்கு அறிவிப்பதே!'

என்றெல்லாம் அருளிய திருவாக்குக்களைக் கருத, அகத்தியரை ஒத்த சிவனடியார்களைத் தேவர்கள் அனைவரும் வழிபட்டு உய்கிறார்கள் என்பது தேற்றம்.

### அகத்தியர் சிவபிரானை மட்டிலும் வழிபடுதல்

तेन त्वमेव ननु सिध्यसि पारिशेष्या -
    त्तस्येन्दुशेखर तपोनिकरैरुपास्य: ।
तस्याप्युपासकतया विनिवेशितेभ्य -
    स्तेभ्यस्तव त्वतितरां महिमा प्रसिध्येत् ॥३॥

தேந த்வமேவ நநு ஸித்யஸி பாரிசேஷ்யாத்
    தஸ்யேந்துசேகர தபோநிகரைருபாஸ்ய: |
தஸ்யாப்யுபாஸகதயா விநிவேசிதேப்ய:
    தேப்யஸ்தவ த்வதிதராம் மஹிமா ப்ரஸித்யேத் || 3 ||

சந்திர சேகரராகிய ஈசனைத் தவிர எல்லாத் தேவர்களும் அகத்தியரை வழிபடுவதை வால்மீகி முனிவர் குறிப்பிடுவதால் பாரிசேட நியாயத்தால் (by rule of elimination) சிவபெருமானே அகத்தியரால் வழிபடப்படும் தெய்வம் என்பதும், அவனே அகத்தியரை வழிபடும் ஏனைய எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான பெருங்கடவுள் என்பதும் புலனாகின்றது.

[உ-சு] சிவபெருமானை மட்டிலும் அகத்தியர் வழிபடுகிறார்; அவ்வகத்தியரைப் பிற தேவர் அனைவரும் வழிபடுகின்றனர்; அத்தேவர்களுக்கும் அகத்தியருக்குப் போலவே சிவபெருமான் உபாசனா மூர்த்தி ஆகிறார்.

[ப-வி] மெய்யடியாராகிய அகத்தியருக்குச் சிவபெருமான் நேரடியாக (direct) வழிபடு கடவுளாகிறார்; அத்தகு பக்குவமில்லாத ஏனையோருக்கும் சிவபெருமானே முறையாக (in due course) வழிபடு கடவுளாகிறார்; தன்னை மட்டிலும் வழிபடும் மெய்யடியார்களை வழிபட்டு உய்யும்படி, தன்னைப் பொதுநீக்கி வழிபட அறியாதிருந்தும் தன்னையும் அவ்வப்போது வழிபடும் தேவர்களை இறைவனே ஆற்றுப்படுத்துகிறான்.

"முழுத்தழல் மேனித் தவளப்பொடியன், கனகக் குன்றத்து
எழிற்பரஞ் சோதியை, எங்கள் பிரானை, இகழ்திர் கண்டீர்;
தொழப்படும் தேவர் தொழபடுவானைத் தொழுத பின்னைத்
தொழப்படும் தேவர் தம்மால் தொழுவிக்கும் தன் தொண்டரையே"

என்ற அப்பர் திருவாக்கு (4-112-5) இதனை உறுதி செய்யும்.

யாவரினும் மேலானவன் சிவனே என்ற எண்ணத்தால் சிவனிடத்தில் இயற்கையாக எழும் பற்றினைச் சிவபக்தி என்றார்கள்.

ஶிவோத்கர்ஷபுத்தி: ஶிவபக்தி: என்பது இலக்கணம். இத்தகு பக்குவமுடையார்கள், ஶிவ ஏகோ த்யேய: ஶிவங்கர: ஸர்வமன்யத்பரித்யஜ்ய என்ற வேத (அதர்வ சிகை உபநிடதம்) வாக்கியப்படி மற்றைத் தெய்வங்களை விடுத்துச் சிவபெருமானை மட்டிலுமே வழிபடுவார்கள். "நேதி நேத்யாத்மா" என்பது இவ் உபாசனையின் ஞானாங்கமாகும்.

"அத்தேவர் தேவர் அவர் தேவர் என்று இங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பற்றேதும் இல்லாதென் பற்றற நான் பற்றி நின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ!" (8-10-5)

"என் கடைக்கண்ணினும் யான்பிற ஏத்தாவகை, இரங்கித்
தன் கடைக்கண் வைத்த தண் தில்லைச் சங்கரன்" (திருக்கோவை 298)

"சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம்;
சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம்" (6-98-5)

என்பன போன்ற திருமுறைத் திருவாக்குகளினால் உண்மை அடியார்களின் உறைப்பாகிய பக்குவத்தை உணரலாம்; இத்தகு பக்குவமில்லாதாரும் வெவ்வேறு காரணங்களுக்காக அவ்வப்போது இறைவனை வழிபடுவார்கள் என்பதை

"வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்; மனம் நின்பால்
தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மை எலாம் தொழவேண்டி" (8-5-16)

என்ற திருவாக்கால் அறியலாம். அபக்குவிகளாகிய இவர்களுக்குச் செய்யும் அருளினும் மேலான முக்தி இன்பத்தை மெய்யடியார்களுக்கே இறைவன் வழங்குகிறான் என்ற உண்மை,

"அன்பர் ஆனவர்க்கு அருளி, மெய்யடியார்கட்கு இன்பம் தழைத்திடும்" (8-42-9)

என்ற திருவாசகத்தால் புலனாகும். இன்பம் தழைத்தலாவது ஜீவித தசையிலேயே முக்தனாக இருப்பதாகும். எனவே, ஜீவன் முக்தி என்பது சிவபக்தியினால் விளைவதாகும்; சிவபக்தி என்பதோ சிவனே பெரியவன் என்ற உத்கர்ஷ புத்தியே ஆகும்; சிவசம புத்தி என்பது அஞ்ஞானமே ஆகும். "மாத்வா ருத்ர சுக்ருதாமா" என்ற ரிக்கினால் வேதமே சிவசமபுத்தியைத் தடைசெய்துள்ளது. சிவமே பதி (கடவுள்) என்பதும் பிற தேவர்கள் அனைவரும் பசுக்களே என்பதும் வேத சம்மதம்; வால்மீகி முனிவர் வரையும் அகத்திய ராசிரமப்படம் இவ்வுண்மையை நன்றாக உணர்த்துகிறது.

## பாரிசேட நியாயம்

ஒரே இனத்தைச் சார்ந்த பொருள்களையோ, காரண காரியங்களையோ தொகுத்து உரைக்கும் பொழுது, எஞ்சியுள்ள ஒன்று விடுபடுவதால் அதனைப்பற்றிய உண்மையை (அ) முக்கியத்துவத்தை (அ) வேறுபாட்டை உணரச் செய்வது பாரிசேட நியாயமாகும்.

பரம்பொருளாகிய சிவபெருமானைத் தேவருள் ஒருவன் என்று எண்ணுவது பாமரர் செய்கையாகும். இங்ஙனம் எண்ணிய காரணத்தாலேயே மன்மதன் அழிந்து போனான் என்று தம்முடைய சிவ மகிமைத் துதியில், புஷ்ப தந்தர் காட்டுகிறார்.

வேதம் முதலிய சாத்திரங்கள் பாரிசேஷ நியாயத்தைக் கடைப்பிடித்துச் சிவபெருமானைப் பிரித்துணர்த்தி அவனுடைய 'ஸஜாதீய விஜாதீய ஸமத்வ ராஹித்யத்தை'ப் பறை சாற்றும்.

1. பிருகதாரணிய உபநிடதம் "நேதி நேதி ஆத்மா" என்று உரைக்கும். "இஃது அன்று; இஃது அன்று" என்று, சுட்டி அறியப்படும் எல்லாப் பொருள்களையும் நீக்கிவிட்டுச் சுட்டறிவிற்கு வாராததும் அறிபவனின் அறிவினுள் அறிவாகித் தூண்டுவதாகிய ஆன்மா இரண்டற அறியப்பட வேண்டும் என்பது இவ்வாக்கியத்தின் பொருள். இரண்டற (அத்வைதமாக) அறிவது என்பது அறிபவன் அறிகின்ற காலத்திலேயே அறிகின்ற தன்னைப் பிரித்து அறியாது, அறியப்படும் பொருளாகிய ஞேயத்தை மட்டும் தொடர்ந்து அறிவதாகும். இஃது, உறங்குகின்ற ஒருவன் உறங்குகின்ற காலத்தில் 'நான் உறங்குகிறேன்' என்று எண்ணாமலேயே உறங்கிக் கொண்டிருப்பதைப் போல என்று கூறலாம். (ஆனால் அன்றாட உறக்கம் அறியாமை வடிவினது; முக்தியைத் தாராது என்பது இரண்டிற்கும் உள்ள வேறுபாடு).

இங்கு கூறப்பட்டுள்ள 'ஆன்மா' என்பது சிவபெருமானின் திருப்பெயர் என்பதை 'ஆத்மாய நம:' என்ற வேதோக்தமான அப்பெருமானுடைய அருச்சனையிலிருந்து அறியலாம்.

2. 'அக்நிஶ்ச ம இந்த்ரஶ்ச மே' என்று தொடங்கும் சமக அனுவாகத்தில் உருத்திரன் விடப்பட்டுள்ளதால் அவனே பரம்பொருள் என்று அறியப்பட வேண்டும். 'அக்நிஶ்ச ம இந்த்ரஶ்ச மே' என்றால் அக்நியால் ஆவது எனக்கு இந்திரனாலேயே ஆகும் என்பதாம். 'விஷ்ணுஶ்ச ம இந்த்ரஶ்ச மே' என்றால், அவ்வண்ணமே, விஷ்ணுவால் ஆவதும் எனக்கு இந்திரனாலேயே ஆகும் என்பதாம். இங்கு இந்திரன் என்று கூறப்படுபவர் 'இதி பரமைஶ்வர்யே' என்ற வேர்ச்சொல் விளக்கத்தின் படி சிவபெருமானே ஆவார். 'ருத்ரஶ்ச ம இந்தர்ஶ்ச மே' என்று கூறப்படாமல் விடப்பட்டுள்ள பாரிசேடத்தால் இதனை உணரவேண்டும்.

இங்கு, 'ஸர்வாணி ஹ வா அஸ்ய நாம தேயானி' என்ற ஆச்வலாயன ரிஷியின் வாக்கியத்தையும் நோக்க வேண்டும். 'வேதத்தில் காணப்படும்) எல்லாத் திருப்பெயர்களும் இவனுடைய (உருத்திரருடைய) பெயர்களே' என்பது இதன் பொருள். உலகத்தில் நடராஜன் என்ற ஒருவரின் பெயர் ஆதியில் சிதம்பர நடராஜப் பெருமானின் பெயர் ஆகும் என்பதைப் போலவே வேதத்திலும் இந்திரன் என்பது ஆதியில் பரம்பொருளாகிய சிவத்தின் பெயரே ஆகும். இவ்வண்ணமே தசரத இராமனுக்கு முன்பாகவே பரசுராமன் இருப்பதாலும், அவருக்குக் முன்னதாகவே பல இராமர்கள் இருந்திருக்கக் கூடும் என்பதாலும் 'இராமன்' என்பதும் ஆதியில் சிவபெருமானின் பெயரே ஆகும்.

3. யஜுர்வேதீய தைத்திரீய ஆரண்யகத்தில் சிம்சுமாரமாக வர்ணிக்கப்படும் கச்யபருடைய அவயவங்களில் மூர்த்தா - தர்ம தேவதை; மேல் தாடை - பிரம்மா; கீழ் தாடை - யக்ஞேச்வரன்; ஹ்ருதயம் - விஷ்ணு; குஹ்யம் - ஸம்வத்ஸர தேவதை; முன் கால்கள் - அசுவினி தேவதைகள்; நடுவு - அத்ரி முனிவர்; பின் கால்கள் - மித்ரா வருண தேவதைகள்; வாலின் முதல் பாகம் - அக்நி; வாலின் இரண்டாம் பாகம் - இந்திரன்; வாலின் மூன்றாம் பாகம் - ப்ரஜாபதி; வாலின் நான்காம் பாகம் - அபயபத வாச்ய ப்ரம்மா என்று துதிக்கப்பட்ட பிறகு, சிம்சுமாரத்தின் தலையைத் துதிக்க வேண்டி, "யஸ்மை நமஸ்தச்சிர:" (யாருக்கு நமஸ்காரம் உரியதோ அவர் சிரஸ்) என்று -> "எஞ்சியுள்ள" சிவபெருமானின் முதன்மை (தலைமை) விளக்கப்பட்டுள்ளது.

சிம்சுமாரத்தின் உறுப்புகளில் தலையே பிரதானமானது; அது பெயர் கூறாமல் விடப்பட்டுள்ள சேஷியாகிய சிவபெருமான் என்று புகழப்படுகிறது. தலைவராகிய சிவபெருமானுக்கே வணக்கங்கள் எல்லாம் உரியன என்ற சிறப்பு உண்மையும் இங்கு உணர்த்தப்படுகிறது.

நமஸ்காரம் சிவபெருமானுக்கே உரியது என்பதை 'சூலகவ ப்ரகரணத்தில்' சிவபெருமானைக் குறித்துப் பசு நியோஜனம் செய்யும் மந்திரமும், 'யஸ்மை நமஸ் தஸ்மை த்வா ஜூஷ்டம் நியுநஜ்மி' (யாருக்கு நமஸ்காரம் உரியதோ அவரைக் குறித்து உன்னை விரும்பி நியோஜிக்கிறேன்) என்று துணைச் சாட்சியம் (corroboration) பகர்கிறது. சூலகவம் என்பது நித்ய கர்மாவாகிய பாக யக்ஞங்கள் ஏழில் ஒன்று. சிவனைக் குறித்தது. ஆச்வலாயனர், போதாயனர் போன்ற ரிஷிகளால் விதிக்கப்பட்டது.

கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதங்களின் ஆதி சாகையாகிய மைத்ராயணீய சாகையின் ஸ்ரீ ருத்ரத்தில், 'நமோ நமாய நம:' என்ற மந்திரங் காணப்படுகிறது. எல்லோரும் சிவனையே வணங்குவதாலும், அவர் பிறரை வணங்காததாலும் அவருக்கு நமன் (நமஸ்கார ரூபன்) என்றும் பெயர் சித்திக்கிறது.

பரத முனிவர் அருளிய அபிநய சாஸ்திரத்தில், வஜ்ரிணீ என்ற வச்சிராயுத முத்திரையால் இந்திரனும், பத்மினி என்ற தாமரை மலர் முத்திரையால் பிரமனும், சங்கினீ என்ற சங்கு முத்திரையால் விஷ்ணுவும் அபிநயித்துக் காட்டப்பதுவது போல் யாதொரு சூலம் போன்ற ஆயுத அபிநயத்தால் காட்டப்படாமல், தலைக்கு மேல் இரு கைகளையும் கூப்பிய அஞ்சலி - நமஸ்கார முத்திரையால் சிவபெருமான் காட்டப்படுகிறார்.

இதனால் வேதத்தைப் போலவே ஏனைய சாத்திரங்களும் சிவபெருமானைப் பிற தேவர்களிடமிருந்து பிரித்துக் காட்டி அவனுடைய தலைமையை உணர்த்தி நிற்கின்றன.

**"சேடனே!** உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே!" (7-48-6) என்பது நம்பி ஆரூரரின் தேவாரம்.

**'பொதுநீக்கித்** தனை நினைய வல்லோர்க்கு என்றும் பெருந்துணை' (6-1-5) என்பது திருநாவுக்கரசர் திருமொழி.

## ஸ்ரீ இராமபிரானின் சிவபக்தி

அவதாரிகை உரைச்சுருக்கம்: இராவணனைக் கொல்லும் போது கூட இராமனால் பயன்படுத்தபடாதது 'வைஷ்ணவம்' என்ற அஸ்திரமாகும்; இதனைப் பிரயோகித்தால் எல்லா உயிர்களுக்குமே அச்சம் உண்டாகும்; மது கைடபர்களைக் கொல்ல முன்னர்த் திருமாலால் படைக்கப்பட்ட படையாகும் இது. பின்னர் 'இலவணன்' என்ற அசுரனைக் கொல்லச் சத்துருக்கனனிடம் இப்படையைத் தந்து இராமன் அனுப்புகிறார். ஆயினும் சிவபிரானின் அருளால் இலவணன் பெற்றுள்ள சூலாயுதம் அவன் கையில் இருக்கும் வரையில் எந்த வழியிலும் எவராலும் அவனை வெல்ல முடியாது. "ஆகவே அச்சூலம் அவன் கையில் இல்லாத சமயம் பார்த்துச் செல்" என்று இராமன் சத்துருக்கனனிடம் கூறும் போது, "ஸ்ரீமத: சிதிகண்டஸ்ய க்ருத்யம் ஹி துரதிக்ரமம்" (திருவாளனாகிய நீலகண்டரின் செயலை யாராலும் மீற முடியாது) என்று உபதேசிக்கிறார்; இதனால் சிவபெருமானின் ஒப்பும் உயர்வும் அற்ற மேன்மையை உணர்ந்த சிவபக்தர் ஆகிறார் இராமபிரான்.

अत्यन्तपूज्यविषयं किल यत्प्रसिद्धं
श्रीमद्विशेषणमिदं हरिमूर्तिरूपात् ।
अस्त्रात्वदाप्तमधिकं किमपि त्रिशूलं
व्यङ्क्तुं त्वयीव न परत्र निवेशितं तत् ॥४॥

அத்யந்தபூஜ்யவிஷயம் கில யத்ப்ரஸித்தம்
ஸ்ரீமத்விசேஷணமிதம் ஹரிமூர்திரூபாத் |
அஸ்த்ராத்வதாப்தமதிகம் கிமபி த்ரிசூலம்
வ்யங்க்தும் த்வயீவ ந பரத்ர நிவேசிதம் தத் || 4 ||

कुम्भोद्भवस्य सुरसंसदुपास्यता च
श्रीमद्विशेषणमिदं च तवेन्दुमौले ।
श्रीरामचन्द्र वचनेष्विति तन्निबन्ध:
तस्यापि भक्तिमधिकां भवति व्यनक्ति ॥५॥

கும்போத்பவஸ்ய ஸுரஸம்ஸதுபாஸ்யதா ச
ஸ்ரீமத்விசேஷணமிதம் ச தவேந்துமௌலே |
ஸ்ரீராமசந்த்ர வசநேஷ்விதி தந்நிபந்த:
தஸ்யாபி பக்திமதிகாம் பவதி வ்யனக்தி || 5 ||

மிகவும் வணங்கத்தக்கவரிடம் மட்டுமே உபயோகப்படும் 'ஸ்ரீமத்' என்ற அடைமொழி இராமனின் வாய்மொழியாகச் சிவபெருமானைக் குறித்து

மட்டுமே உபயோகிக்கப்பட்டுள்ளது. இது எப்படையினும் (வைஷ்ணவ அஸ்திரத்தைக் காட்டிலும்) சிவானுக்கிரகம் மேலானது (சூலம் பெரியது) என்பதைக் காட்டுவதாகவும், இராமனுக்குச் சிவபெருமானிடம் உள்ளதைப்போன்ற பக்தி வேறு தெய்வத்திடம் இல்லை என்பதைக் காட்டுவதாகவும் அமைந்துள்ளது.

[உ-சு] 'ஷடர்த்த நயன: ஸ்ரீமான்' (திருவாளன் முக்கண்ணன்) என்பன போன்ற இடங்களில் (இராமாயணத்திலேயே) சிவபெருமானின் திருமேனி அழகு 'திரு' என்று குறிக்கப்படுகிறது; மாறாக இவ்விடத்தில் சிவபெருமானின் உத்கர்ஷத்தை (மேன்மையை)க் குறிக்கவே பிறரிடம் இல்லாத 'திரு' (பராக்கிரமும் முக்திச் செல்வமும்) அவனிடம் உள்ளது என்று பாராட்டப்படுகிறது.

यस्यास्ति हि स्म शिबिरं शिवदक्षिणाग्रे
कुक्षिं गते जलनिधेर्नलसेतु क्लुप्त्यै ।
तस्मिन् जगद्विदित भूमनि सेतुबन्धे
पूर्वं प्रसन्न इति च त्वयि भक्तिमूचे ॥६॥

யஸ்யாஸ்தி ஹிஸ்ம சிபிரம் சிவதக்ஷிணாக்ரே
குக்ஷிம் கதே ஜலநிதேர்நலஸேது க்லுப்த்யை |
தஸ்மின் ஜகத்விதித பூமநி ஸேதுபந்தே
பூர்வம் ப்ரஸன்ன இதி ச த்வயி பக்திமூசே || 6 ||

தென் கடலின் தென் கோடியில் புகழ்மிக்க சேதுபந்தத்தில் இராமபிரான் 'நளசேது' என்ற பாலத்தைக் கட்டுவதற்குச் சிவபெருமானே அருள் செய்தார் என்று இராமபிரானே கூறுவதும் அவருடைய ஆழ்ந்த சிவபக்திக்கு மேலும் சான்றாகிறது.

[உ-சு] சீதையை மீட்டுக்கொண்டு, இலங்கையிலிருந்து திரும்பும் பொழுது, இராமபிரான், சேனைகள் தங்கிய கூடாரங்களையும், அனுமன் களைப்பாறிய ஹிரண்ய நாபம் என்ற பொன் மலையையும், கடலுக்குள் உள்ள 'சேதுபந்தம்' என்ற புண்ய தீர்த்தத்தையும், போருக்காகக் கடலைக் கடக்க வானரங்களால் நிர்மாணிக்கப்பட்ட நளசேது என்ற பாலத்தையும் பிற அதிசயங்களையும் காட்டிக்கொண்டு வரும் போது முன்னதாக அங்கேயே ஓரிடத்தில் தான் சிவனைப் பூசித்ததையும், இறைவன் வெளிப்பட்டு அருள் புரிந்ததையும் குறிப்பிடுகிறார்:-

"அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதம் அகரோத் ப்ரபு:" (முன்னதாக இவ்விடத்தில் நாயகராகிய மஹாதேவர் எனக்கு அருள் புரிந்தார்) என்பதாகும் இராமன் மொழி.

[ப-வி] கூர்மபுராணம், ஸ்காந்தம் நாகரகண்டம், அத்யாத்ம இராமாயணம் போன்ற பிற நூல்களிலும் வால்மீகி இராமாயணத்தில் கூறப்பட்ட இராமனின் சிவபூஜை சிறு சிறு மாற்றங்களுடன் காணப்படுவதற்கு தீக்ஷிதர் ஸமாதானங்கள் கூறுகிறார்: நீண்ட இவ்வுரையின் சாரம்:- சேதுபந்தம் என்பது இராமன் வானரப் படையுடன் அங்கு வருவதற்கு முன்பே உள்ள புண்ய தீர்த்தம்; அங்கு இராமனும் பிறரும் பன்முறை பல இடங்களில் சிவபூஜை செய்துள்ளனர். இராமன் பூஜித்து விஸர்ஜனம் செய்த ஸைகத லிங்கங்கள் இராமேஸ்வரர்கள் என்றும் அக்காரணம் பற்றி அத்தலம் இராமேஸ்வரம் என்றும் பின்னர் அறியப்படுவதாகும்.

சீதை மீட்கப்பட்டபிறகு, சீதை தன் கையால் பிடித்த ஸைகத (மணல்) லிங்கம் இராமனால் பூஜிக்கப்பட்டுத் தற்காலத்தில் "இராமநாதர்" என்று அறியப்பட்டு அருள்பாலித்து வருகின்ற பெருமான் ஆவார்; இவரைக் குறித்தே ஞானசம்பந்தப் பெருமானும், அப்பர் பெருமானும் பாடியுள்ளனர்: இப்பெருமான், இராவணனைக் கொன்றதால் இராமனுக்கு உண்டான ப்ரஹ்மஹத்தி, வீரஹத்தி, பக்தஹத்தி முதலிய பழி பாவங்களை எல்லாம் போக்கி இராமனைத் தூய்மை செய்த அருளாளர் ஆவார்.

இந்த சிறப்பினைத் –

"தேவியை வவ்விய தென் இலங்கைத் தசமாமுகன்
பூவியலும் முடி பொன்றுவித்த பழி போய் அற
ஏவியலும் சிலை அண்ணல் செய்த இராமேச்சுரம்" (3-10-2) என்று சம்பந்தரும்,

"கடல் இடை மலைகள் தம்மால் அடைத்து, மால், கருமம் முற்றித்
திடல் இடைச் செய்த கோயில் திரு இராமேச்சுரம்" (4-61-3) என்று அப்பரும் பாடியுள்ளனர்.

இராமாயணச் சரிதப் போக்கினால் இராமனிடம் குற்றங் குறைகள் காண்பார் உண்டு; அவற்றிற் சில:

1. கானகம் புகும் காலத்தில், 'தசரதன் கூறியது காதில் விழவில்லை' என்று பொய் கூறுமாறு தேரோட்டியைத் தூண்டியது.

2. இலக்குவனின் தடையை மீறி அண்ணனைக் (வாலியை) கொல்வதற்காத் தம்பியுடன் (சுக்கிரீவன்) நட்புச் செய்தது.

3. வாலியை முன் வந்து போரிடாமல் பின் இருந்து மறைந்து கொன்றது.

4. சூர்ப்பனகையிடம் பயனற்ற நகைப் பேச்சினால் தீங்கினைத் தானே வரவழைத்துக் கொண்டது.

5. "பரதனுக்கு அரசுரிமை" என்ற தந்தையின் வரம் நித்தியமாய் இருக்க, இராவண வதத்தின் பிறகு, அயோத்தியின் அரசாட்சியைத் தான் ஏற்றது.

இவற்றுள், போருக்குப் பிறகு சிவபெருமானின் காட்சியைப் பெற்ற இராமன், அவரருளால் சுவர்க்கத்தில் இருக்கும் தந்தை தசரதனின் காட்சியையும் பெற்று தான் விரும்பிய வரங்களைத் தந்தையிடம் கோருகிறார். சிவபெருமானிடம் "தங்கள் அருளால் நான் க்ருதக்ருத்யன் (செய்ய வேண்டியதைச் செய்தவன்) ஆனேன்" என்று பணிகிறார். சிவபெருமானும் அயோத்திக்கு மீண்டு மக்கள் விருப்பப்படி அரசாளும்படி இராமனிடம் கூறுவதால், இறைவனின் ஆணைப்படியே அயோத்தியின் அரசுரிமையை ஏற்றார் என்பது சமாதானம். இறைவனின் ஆணையே மேலான ஸத்ய தர்மானுஷ்டானமாகும்.

"கொல்வாரேனும் குணம் பல நன்மைகள் இல்லாரேனும் (நமச்சிவாய) இயம்புவர் ஆயிடின் எல்லாத் தீங்கையும் நீங்குவர்" என்ற சம்பந்தர் வாக்குப்படி, உலகியல் குற்றங்கள் சிவனடியார்களைச் சாரமாட்டா என்பதால் அவை இராமபிரானையும் சார மாட்டா.

இக்காரணம் பற்றியே சம்பந்தரும் இராமபிரானை, "ஈனம் இலாப் புகழ் அண்ணல்" (3-10-3) என்று குறிப்பிடுவார்; சிவபெருமானைப் பூசித்துத் தன் புகழை ஈனம் இல்லாததாகச் செய்து கொண்ட அண்ணல் எண்பதே இதன் பொருளாகும்.

"ஏகன் ஆகி இறைபணி நிற்கின்ற" பெரியோருக்குச் "சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன் கருணை" நலம் வாழியவே!

அவதாரிகை உரைச்சுருக்கம்: அடுத்த மூன்று பாடல்களால், இராமபிரானின் வாழ்க்கையின் முக்கிய சில நிகழ்வுகளைக் கொண்டு அவருடைய மேலான சிவபக்தியை வெளிப்படுத்துகிறார்:

श्रान्तस्सुदीर्घसमरेण रघुप्रवीर –
श्चिन्ताकुल: कलशयोनिकृतोपदेश: ।
ब्रह्माच्युतत्रिणयनेश भवत्स्वरूपं
स्तोत्रेण यद्रिपुजयाय रविं प्रपन्न: ॥७॥

ச்ராந்தஸ்ஸுதீர்கஸமரேண ரகுப்ரவீர:
சிந்தாகுல: கலசயோநிக்ருதோபதேச: |
ப்ரஹ்மாச்யுத த்ரிணயநேச பவத்ஸ்வரூபம்
ஸ்தோத்ரேண யத்ரிபுஜயாய ரவிம் ப்ரபன்ன: || 7 ||

நீண்ட காலம் இராவணனுடன் போரிட்டும் வெற்றியை அடையாமல், களைப்பையும் கவலையையும் அடைந்த இராமன், அகத்தியரின் உபதேசப்படி ஆதித்ய ஹ்ருதயம் என்ற மந்திரத்தைப் பெற்று, ஆதித்ய மண்டல வாஸியான சிவபரம் பொருளையே தஞ்சம் புகுந்ததால், இராமனின் சிவபக்தி மீண்டும் உறுதியாகிறது.

[உ-சு] ஆதித்ய ஹ்ருதயம் என்னும் தோத்திரம், ப்ரம்மா, ஈசானன், அச்யுதன் ஆகிய மூவருக்கும், ஈச்வரன் எனத் தொடங்கி "ரௌத்ராய வபுஷே நம:" (உருத்திர உருக் கொண்டவனுக்கு வணக்கம்) என்பதாலும், அதர்வசிரஸ் உபநிடதப்படி உருத்திர சப்தம் பரமாத்ம வாசகம் என்பதாலும், இந்த தோத்திரத்திற்கு ஆதித்யனுள் அந்தர்யாமியாகவுள்ள சிவபெருமானே பொருள் ஆவார்.

1. "நமோ ஹிரண்ய பாஹவே ..." என்ற மந்திரத்தால் "பொன்மயமான தோள்களும் பொன் வண்ணமும், பொன்னார் உருவும், கொண்ட பொற்பதியும், அம்பிகாபதியும், உமாபதியும் ஆகிய பசுபதிக்கு வணக்கம்" என்று சூரியனுக்குள் உள்ள பரமான்மா துதிக்கப் படுகிறார்.

2. "அஸௌ யஸ்தாம்ர: ..." என்று தொடங்கி "அஸௌ யோவஸர்பதி ...." என்று செல்லும் ஸ்ரீருத்திர மந்திரங்களும், "கண் எதிரே சூரியனாக உதிக்கும் சிவபெருமானை இடையர்களும் தண்ணீர் தாங்கி வரும் பெண்களும் எளிதில் காண்கிறார்கள்" என்று அவன் கருணையையே வியக்கின்றன.

மேலும், இவை போல் வேதத்தில் காணப்படும் மந்திரங்கள் எல்லாம் சிவபரமாகவே காணப்படுவதால், வேதத்தின் உப ப்ரம்மணமான (வேதப் பொருளையே விரித்து, வேதத்தோடு இணங்கிச் செல்வதான) இராமாயணத்தில் சொல்லப்பட்ட ஆதித்ய ஹ்ருதயமும் சிவபரமே என்பதில் ஐயமில்லை.

[ப-வி]

"அருக்கன் பாதம் வணங்குவர், அந்தியில்;
அருக்கன் ஆவான் அரனுரு அல்லனோ?
இருக்கு நான்மறை ஈசனையே தொழும்
கருத்தினை நினையார், கல்மனவரே" (5-100-8)

என்ற பாடலால் சூரியன், சிவபெருமானாகிய மூர்த்திமானுக்கு ஒரு மூர்த்தமே என்று அப்பரடிகள் விளக்குவார்.

ப்ரச்னோத்தர ரத்ன மாலையில், பகவத்பாதரும், "கோ ப்ராஹ்மணை ருபாஸ்ய:?" (அந்தணரால் பூசிக்கத் தக்கவர் யார்?) என்று கேட்டுக் கொண்டு, அதற்கு விடையாக, "காயத்ரி - அர்க்க - அக்நி கோசர: சம்பு: " (காயத்திரி மந்திரப் பொருளும், சூரியன் மற்றும் அக்நி மூர்த்தங்களில் வெளிப்படுபவனும் ஆன சிவபெருமான்) என்று தெளிவு செய்கிறார்.

रक्षोधिपो निहत एव दिवं प्रयाहि
कार्यं कृतं खलु नः इत्युदिते विधात्रा ।
राज्यस्थितः कुरुतुरङ्गममेधयज्ञ -
मित्युक्तमेव जगृहे तव यच्च शम्भो ॥८॥

ரக்ஷோதிபோ நிஹத ஏவ திவம் ப்ரயாஹி
கார்யம் க்ருதம் கலு ந: இத்யுதிதே விதாத்ரா |
ராஜ்யஸ்தித: குருதுரங்கமமேதயக்ஞம்
இத்யுக்தமேவ ஜக்ருஹே தவ யச்ச சம்போ || 8 ||

இராவண வதத்தின் பின்னர், இராமனிடம் பிரம்மா வானவர், "எங்கள் (தேவ) காரியம் உன்னால் இனிது நிறைவேறியது; இனி நீ வைகுண்டம் செல்லலாம்" என்று சொல்ல, இதற்கு மாறாகச் சிவபெருமான் இராமனை அயோத்தியில் அரசாண்டு, அச்வமேதம் என்ற வேள்வியைச் செய்து, பின்னர் வைகுண்டம் போகும் படி கூறவும், இராமபிரான் பிரம்மன் சொல்லிய படி நடவாமல், சிவபெருமானின் ஆணைப்படியே நடந்து கொண்டார் என்பதாலும் அவர் சிவனையே தலைவராக ஏற்றுப் பக்தி செய்தது புலனாகும்.

[ப-வி] பால காண்டத்தில், கங்கை பூமிக்கு வந்ததைக் கூறும் வால்மீகி முனிவர், பிரமனுக்கும் மகாதேவருக்கும் உள்ள வேறுபாட்டை இனிமையாக உணர்த்துவார்:

பகீரதன் ஆயிரம் வருடங்கள் கொடிய தவம் செய்த பின், பிரம்மா அவன் முன் தோன்றி, "வேண்டும் வரம் யாது?" என்று கேட்டார்; அவன் ஆகாச கங்கை பூமிக்கு வர வேண்டும் எனக் கேட்டதைத் தொடர்ந்து, "சங்கரர் ஒருவரே அவளைத் தாங்கக் கூடியவர்" என்று பிரம்மா அறிவுறுத்துகிறார்.

அதன்படி பகீரதன் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்த ஒரே வருடத்தில் சிவபெருமான் காட்சி அளித்து, "உன் எண்ணத்தை நிறை வேற்றுகிறேன்" என்று அருள் பாலித்தார். தன் அடியார்களின் தவவினை தீர்ப்பவனாகிய சிவபெருமான் 'ஆசு தோஷி' எளிதில் கருணை காட்டுபவன் என்பதும் 'ஸர்வக்ஞன்' முற்றும் உணர்ந்தவனாகிய அவன், "மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பவனும், வேண்டுவார் வேண்டுவதே ஈவானும்" ஆகிய உண்மைக் கடவுள் தன்மையைக் கொண்டவன் என்பதும் வால்மீகி சொல்லாமல் சொல்லும் நுணுக்கங்களாகும்.

சிவபுராணத்தில், நாரதரிடம் விஷ்ணுவானவர், "சிவபெருமானின் இச்சையே பரம காரணம்" என்று கூறுவதும்;

பத்ம புராணத்தில், கண்ணன், மார்க்கண்டேயரிடம் "பிரம்ம விஷ்ணுக்களாகிய நாங்கள் எங்கள் ஸ்வபாவப் படியே சிவபெருமானின் திருமேனியிலிருந்து படைக்கப் பட்டோம்; அவருக்கு நாங்கள் புதல்வர்கள்; அவர் எங்களுக்குப் பெரியவர்" என்று கூறுவதாலும்,

காளிதாசரின் குமாரஸம்பவத்தில், தேவர்களிடம், பிரம்மா வானவர், "சிவபெருமான் என்னாலும், விஷ்ணுவாலும் அளக்கப் படாத பெருமை கொண்டவர்; அவருடைய குமாரனைப் படைக்கும் ஆற்றல் எனக்கில்லை" என்று கூறுவதாலும், பதினெண் புராணங்களிலும், மகாபாரதத்திலும், திருமுறைகளிலும் இவைபோன்ற எண்ணற்ற கூற்றுக்களாலும், மூவரினும் மேம்பட்ட துரிய மூர்த்தியே சிவபெருமான்; இதனை அறிந்து அன்பு செய்தவர் இராமபிரான்.

(பெரும்பான்மையான வேதானுஸாரியான புராணாதி நூல்களுக்கு மாறாக, வாசுதேவ பாகவதம், "அஹஞ்ச சர்வஸ்ச ப்ரம்ஹாச ஜகத: பரம காரணம்" அதாவது "நானும் (விஷ்ணுவும்), உருத்திரனும், பிரமனும் உலகிற்கு முடிந்த காரணம்" என்று அனேகேச்வர ஸமஷ்டியைப் பரம காரணம் என்று முடித்துக் காட்டி, வேத ஸம்மதமான துரிய வஸ்துவான உண்மைப் பரம காரண பரசிவத்தை இருட்டடிப்புச் செய்வதால், அப் பாகவதம் அவைதிகம் என்பதும், அதனை வேதவ்யாஸர் அருளியிருக்க மாட்டார் என்பதும் துணிக!)

इक्ष्वाकुवंश भवराज्यपदे निविष्टः
त्वामेव यच्च सुचिरं हयमेधक्लुप्त्या ।
ईजे कथान्तर गिरा शिव तेन चक्री
यष्टव्य इत्यवरजस्य निरस्य भावम् ॥९॥

இக்ஷ்வாகுவம்ச பவராஜ்யபதே நிவிஷ்ட:
த்வாமேவ யச்ச ஸுசிரம் ஹயமேதக்லுப்த்யா |
ஈஜே கதாந்தர கிரா சிவ தேன சக்ரீ
யஷ்டவ்ய இத்யவரஜஸ்ய நிரஸ்ய பாவம் || 9 ||

சிவபெருமானின் உத்திரவுப்படி இராமன் அசுவமேத வேள்வி செய்யப் புகுந்த காலத்தில், அவ் வேள்வியால் விஷ்ணுவே பூசிக்கத் தக்கவர் என்று லக்ஷ்மணன் கூற, இராமன் காரணங் காட்டி அதனை மறுத்து, அவ் வேள்வியால் சிவபெருமானையே ஆராதிக்க, ருத்விக்குகளும் இணங்கினர் என்பதால் இராமனின் தெளிவும் உறுதியான சிவபக்தியும் வெளியாகின்றன.

[ப-வி] "யக்ஞோ வை விஷ்ணு:" என்பதால் திருமால் வேள்வி என்னும் செயல் வடிவமே கொண்டவர்; மாறாக "ஆவோ ராஜானம் அத்வரஸ்ய ருத்ரம் ..." என்ற மந்திரம், சிவபெருமானே வேள்விக்கு நாயகன் என்ற உண்மையைக் காட்டுகிறது. கர்மா, தானே பலிக்காது என்பதால் வேள்வியின் பயனை அவ் வேள்வியே ஆகிய விஷ்ணு அளிக்க மாட்டார்; மாறாக, வேள்விப் பயனை வேள்வி அரசனாகிய சிவனே அளிப்பதால், அவரே கர்மபல தாத்ருத்வம் கொண்ட 'ஈஃவரன்' ஆவார்;

மேலும் 'யக்ஞோ வை ப்ரஜாபதி:' என்றும் வேதத்தில் காணப்படுவதால், விஷ்ணுவானவர் இன்னும் ஒரு தேவதையுடன் ஸமான ஸ்வரூபத்தைக் கொண்டவர் ஆவார்; எனவே அவர் (விஷ்ணு) ஒப்பற்றவர் அல்லர்.

மாறாக, சிவனைக் குறித்துச் சுவேதாச்வதரத்தில், "ந தத் ஸமஸ்சாப் யதிகஸ் ச த்ருச்யதே" (சிவனுக்கு ஸமமோ, அதிகமோ காணப்படவில்லை) என்றும், "ஏகோ ஹி ருத்ரோ நத்விதீயாய தஸ்தே" (உருத்திரர் ஒருவரே; அவரைப் போல இரண்டாமவர் இல்லை) என்றும் வருவதால், சிவமே செம்பொருள் என்று அறியப் பட வேண்டும்.

एतैस्त्वयि प्रकटिता रघुनन्दनस्य
भक्तिः स्थिरा परतरत्वमतिश्च नित्या ।
सुव्यक्तमादिकविना स्वयमात्मनश्च
रुद्रः स विष्णुरिव चेत्युपमोक्तिभङ्ग्या ॥१०॥

எதைஸ்த்வயி ப்ரகடிதா ரகுநந்தனஸ்ய
பக்தி: ஸ்திரா பரதரத்வமதிச்ச நித்யா |
ஸுவ்யக்தமாதிகவிநா ஸ்வயமாத்மநச்ச
ருத்ரஸ் ஸ விஷ்ணுரிவ சேத்யுபமோக்திபங்க்யா || 10 ||

இராமனுக்குச் சிவபெருமானை உபமானமாக கூறுமாற்றால், ஶிவோத்கர்ஷ புத்தியாகிய தன் சிவபக்தியை வால்மீகியும் வெளிப்படுத்துகிறார்.

[உ-சு] கோதாவரி நதியில் ஸ்நாநம் செய்த இராமன், சீதையுடனும் இலக்ஷ்மணனுடனும் காணப் படுவது, ப்ரதோஷ காலத்தில் அபிஷேகம் கொண்ட சிவபெருமான், பார்வதியுடனும் விஷ்ணுவுடனும் (நந்தியுடனும்) காணப்படுவதுபோல் காணப்பட்டார் என்று வால்மீகி கூறுகிறார்:-

க்ருதாபிஷேக: ஸ ரராஜ ராம: ஸீதாத்விதீய: ஸஹ லக்ஷ்மணேன |
க்ருதாபிஷேகோ கிரிராஜபுத்ரியா ருத்ர: ஸ விஷ்ணுர் பகவானிவேஶ: ||

என்ற பாடலால், வ்யாகரண சாஸ்திரப்படி, உபமேயத்தினும் உபமானம் பெரியது என்ற நியாயப்படி, இராமனினும் உயர்ந்தவர் சிவபெருமான் என்ற தன் ஶிவோத்கர்ஷ புத்தியை வால்மீகி வெளிப்படுத்துகிறார்.

[ப-வி] "ஊரன் புலிபோல் பாய்ந்தான்" என்று சொல்லப்பட்டால், புலி நன்கு பாயும் என்று அறியப் பட்ட காரணத்தால், தெளிவாகாத ஊரனின் ஆற்றலுக்கு அது உவமை ஆகிறது; அதே நேரம், உண்மையில் ஊரனைக் காட்டிலும் புலியே நன்கு பாயும் என்பதும் அறியப் பட்ட ஒன்றாகும்; எனவே உபமேயத்தைக் காட்டினும் (உவமிக்கப்படும் பொருள்) உபமானமே (உவமையாகத் தரப்படும் பொருள்) வலியது. இவ்விடம், இராமனைக் காட்டிலும் இறைவன் பெரியவன். "ச்வேதாரண்யே யதாந்தக:" என்றும், "திதிஷ்விவ மகாதேவ: வ்ருத: பரிஷதாம் கணை:" என்றும் வேறு சில இடங்களிலும் இராமபிரானுக்கு உவமையாகச் சிவபெருமானையே வால்மீகி முனிவர் கொண்டு வருவதும் நோக்க வேண்டும்.

## இராவண வதத்திற்கும் சிவனருளே காரணம்

அவதாரிகை: சிவபெருமானே ஸர்வலோக நியந்தா ஆவார்.

संवत्सरं वरद वासयितुं प्रवृत्तः
सीतां दशाननगृहे जगतां नियन्तुः ।
संकल्प एव तव तद्वसतेरबोधे
रामस्य हेतुरिति भावममुष्य मन्ये ॥११॥

ஸம்வத்ஸரம் வரத வாஸயிதும் ப்ரவ்ருத்த:
ஸீதாம் தசாநநக்ருஹே ஜகதாம் நியந்து: |
ஸம்கல்ப ஏவ தவ தத்வஸதேரபோதே
ராமஸ்ய ஹேதுரிதி பாவமமுஷ்ய மன்யே || 11 ||

இராவணனின் இருப்பிடத்தை அறிய இராமன் பல முயற்சிகள் செய்தும், "சீதை ஓராண்டு இராவணனின் இல்லத்தில் இருக்கட்டும்" என்ற சிவ ஸங்கல்பத்தினாலேயே அம்முயற்சிகள் பலன் தரவில்லை.

[உ-சு] சீதையை இராமன் ஒரு வருஷம் பிரிந்திருக்க வேண்டும் என்பதே ஈஶ்வர நியமனம் என்றே எண்ண வேண்டியிருப்பதால் இராமனுக்கு மேலான ஈஶ்வரன் ஒருவன் உண்டு என்றாகிறது.

सीतापहारमवलोक्य रघूत्तमाय
ब्रूयुर्नजात्विति मुनिः विदितत्वदाज्ञः ।
पृष्टो यदस्य रघुचन्द्रमसा निवासं
उक्त्वागतः खगपतिः कियदन्यदन्यत् ॥१२॥

ஸீதாபஹாரமவலோக்ய ரகூத்தமாய
ப்ரூயுர்நஜாத்விதி முநி: விதிதத்வதாக்ஞ: |
ப்ருஷ்டோ யதஸ்ய ரகுசந்த்ரமஸா நிவாஸம்
உக்த்வாகத: ககபதி: கியதந்யதன்யத் || 12 ||

சீதை அபகரிக்கப்பட்டதை நேரில் பார்த்தவர்களும், இராமனுக்குத் தேவையான செய்திகளை விவரிக்கவில்லையே! எல்லாம் அறிந்த ஜடாயுவும் ஏதேதோ சொல்லிக் காலங் கடத்தி விட்டு, இராவணனின் இருப்பிடத்தை கூற முற்படுமுன் உயிரை விட்டுவிட்டான்.

संसूच्य वक्ष्य इति नाह कबन्ध एत -
दज्ञानमभ्यनयदत्र च सूर्यसूनुः ।
उक्तं हि तत्र भगवन्ननिमित्तमन्यत्
संकल्प एव भवतश्शिव तस्य दृष्टिः ॥१३॥

ஸம்ஸூச்ய வக்ஷ்ய இதி நாஹ கபந்த ஏதத்
அக்ஞாநமப்யநயதத்ர ச ஸூர்யஸூநு: |
உக்தம் ஹி தத்ர பகவந்நநிமித்தமந்யத்
ஸங்கல்ப ஏவ பவதச்சிவ தஸ்ய த்ருஷ்டி: || 13 ||

இவ்வாறே கபந்தனும், இராவணனின் இருப்பிடத்தைக் கூறுவதாகக் கூறி கூறாமலேயே போய்விட்டான்; சுக்கிரீவனும் அதனை அறிந்து வைத்திருந்தும், அறியாதவன் போலவே நடித்து விட்டான்!

ज्ञातेरिपुं रघुपतिः लघुसंजिहीर्षेत्
यःक्रोधतः समजिहीर्षदशेषलोकान् ।
मोघो भवेच्छिवतदा निहते रिपौ ते
संकल्प एव न हतेतु तदीयबाणः ॥१४॥

க்ஞாதேரிபும் ரகுபதி: லகுஸஞ்ஜிஹீர்ஷேத்
ய:க்ரோதத: ஸமஜிஹீர்ஷதசேஷ லோகான் |
மோகோ பவேச்சிவததா நிஹதே ரிபௌ தே
ஸங்கல்ப ஏவ ந ஹதேது ததீயபாண: || 14 ||

இராமனால் இராவண வதம் உடனே ஆகக் கூடாதென்பதும், இராமனாலேயே அது ஆகவேண்டும் என்பதும், இரண்டும் சிவபெருமானின் எண்ணங்களே ஆகும்.

[உ-சு] உயிருக்குப் போராடும் ஜடாயு, பேசும் ஆற்றல் இருந்த போதே இராமனுக்குத் தேவையானதைக் கூறாமல் காலங்கடத்தி உயிரை விட்டான்;

கபந்தன், தன் காரியத்தை இராமனால் சாதித்துக் கொண்டு, "சுக்ரிவனுக்கு எல்லாம் தெரியும்; அவனை நட்புச் செய்" என்று வழிகாட்டிவிட்டு மறைந்தான். அதன் பின்னரும், சுக்ரீவன் தனக்கு ஒன்றும் தெரியாது என்றே இராமனை ஏமாற்றியுள்ளான்; சீதையைத் தேட வேண்டிய இடங்களை குறிப்பிடுவதிலிருந்தே சுக்ரீவனுக்கு அவளிருப்பிடம் தெரியும் என்பது தெளிவாகிறது. உத்தர இராமாயணத்திலும் அகஸ்திய இராம ஸம்வாதத்தில், இவ்விஷயம் தெளிவாகிறது. எனவே, இராவண வதத்திலும்,

சீதா ஜயத்திலும் இராமன் அனீஸ்வரனே ஆவான்; சிவக்ருபையே இராமனாலும் அபேக்ஷிக்கப்படுகிறது.

तत्रोद्यते सकलसंहरणाय भीत्या
सद्यो दशाननवधोऽस्त्विति वाञ्छया च ।
यन्नाहरोपित शरन्तमुपेत्यदेवः
तत्रापि सर्वजगदीश स एव हेतुः ॥१५॥

தத்ரோத்யதே ஸகலஸம்ஹரணாய பீத்யா
ஸத்யோ தசாநநவதோஸ்த்விதி வாஞ்சயா ச |
யந்நாஹரோபித சரந்தமுபேத்யதேவ:
தத்ராபி ஸர்வஜகதீச ஸ ஏவ ஹேது: || 15 ||

சீதையைப் பிரிவாற்றாது, மிகவும் சினங் கொண்ட இராமன் "எல்லா உலகங்களையும் இப்பொழுதே அழிக்கிறேன்" என்று முற்பட்டப்போது கூட, இராமனிடம் உள்ள அச்சத்தாலோ, அல்லது தங்களைத் துன்புறுத்தும் இராவணன் தான் சீக்கிரம் அழியட்டுமே என்ற ஆசையாலோ கூட, தேவர்களில் யாரும் இராவணனின் இருப்பிடத்தை அறிந்திருந்தும் இராமனுக்குச் சொல்லவில்லை; ஆகவே சிவ ஸங்கல்பத்தை தேவர் உட்பட மீறுவார் யாரும் இல்லை அல்லவா?

[உ-சு] மகாபாரதத்தில் ப்ரத்யும்நன் ஸால்வனைக் கொல்ல முயற்சித்தப் போது, கிருஷ்ணனாலேயே ஸால்வன் கொல்லப்பட வேண்டும் என்பது ஈஸ்வர ஸங்கல்பம் என்பதால், தேவர்கள் ப்ரத்யும்நனைத் தடுத்துவிட்டார்கள் என்று கூறப் பட்டுள்ளது, காண்க!

**விச்வாமித்ர வசனங் காட்டும் சிவமகிமை**

गङ्गाशिवेशिरसिते पतनेन पुण्या
पापापनोदन विनोदपटीयसीति ।
देवादयोऽपि वसुधातल वासमाप्ताः
स्नातास्तथेति स वचो निबबन्धचार्षम् ॥१६॥

கங்காசிவேசிரஸிதே பதநேந புண்யா
பாபாபநோதன விநோதபடீயஸீதி |
தேவாதயோSபி வஸுதாதல வாஸமாப்தா:
ஸ்நாதாஸ்த்த தேதி ஸ வசோ நிபபந்தசார்ஷம் || 16 ||

கங்கா தேவி, சிவபெருமானின் தலைக்கு வந்த காரணத்தாலேயே எல்லாருடைய பாவங்களையும் போக்குகின்ற புனிதத் தன்மையைப் பெற்றாள் என்றும், சிவ நிர்மால்யமாகிய கங்கை ஆகாச கங்கையினும் தூயது என்ற நோக்கத்தால் தேவர்களும் பூமிக்கு இறங்கிய கங்கையில் நீராடுகிறார்கள் என்றும் இராமனிடம் விச்வாமித்ரர் கூறுவதாக வால்மீகி படைக்கிறார்.

[உ-சு] கங்கையின் வேகத்தைத் தாங்கச் சங்கரரைத் தவிர பிறரால் இயலாது என்று பிரமன் கூறுவதும், பூமிக்கு இறங்க வேண்டி மனம் புழுங்கிய கங்கை, "என்னைச் சங்கரர் எவ்வாறு தாங்குவார் பார்க்கலாம்!" என்று கோபத்துடன் பாய்ந்ததும், அக்கங்கை முழுவதையும் ஈசன் ஜடாபாரத்துள் மறைத்துக் கொள்ள, கங்கையும் பகீரதனும் உள்ளம் கலங்கியதும், பகீரதனுக்காகக் கங்கையில் ஒரு சிறு பகுதியை ஏழு நதிகளாகப் பூமி தாங்கும் படிப் பெருமான் கீழே ஒழுக்கியதும் அவனுக்கு இணை, யாரும் இல்லை என்பதைக் காட்டுவனவாகும்.

"பவாங்க பதிதம் தோயம் பவித்ரம் இதி பஸ்ப்ருசு:"

"ஈஶன் மேனியில் பட்டு இறங்கிய காரணத்தால் இந்த நீரே மிகவும் தூயது" என்று தேவர்களும் பூமியில் கங்கையில் நீராடுவதும், கங்காஸ்நாநம் சாப, பாபங்களைப் போக்குவதும் சிவனது மகிமையே என்பதும் கூறப்பட்டுள்ளன.

**பரம்பொருளாகிய சிவபெருமானுக்கு அபஜயம் (தோல்வி) அல்லது அபகர்ஷம் (இழிவு) என்பன எம்முறையிலாவது எப்போதாவது உண்டா?**

नारायणस्य धनुषस्तव भीमचापात्
उत्कृष्टतां गणयतः किल भार्गवस्य ।
यन्मेनिरे त्वदधिकं तमितीववाक्यं
तद्बाधितं च वचनेन रघूद्वहस्य ॥१७॥

நாராயணஸ்ய தநுஷஸ்தவ பீமசாபாத்
உத்க்ருஷ்டதாம் கணயத: கில பார்கவஸ்ய |
யன்மேநிரே த்வததிகம் தமிதீவவாக்யம்
தத்பாதிதம் ச வசநேன ரகூத்வஹஸ்ய || 17 ||

ஓரிடத்தில் நாராயணரின் வில்லே சிவபெருமானின் வில்லைக்காட்டிலும் சிறந்தது என்று பரசுராமர் கூறுவது கூறப்பட்டுள்ளது. இருப்பினும்

இன்னோரிடத்தில் இராமனின் வசனத்தாலேயே பரசுராமனின் கருத்து தவறு என்பது புலப்படுகிறது.

[உ-சு] அரச குலத்தாரின் பெருமையைப் பொறாதவர் பரசுராமர்; இராமன், ஜனகன் சபையில் சிவதனுஸை முறித்ததைக் கேள்விபட்டு, வலிந்து அவருடன் போர் புரிவதற்காக "நீ முறித்த சிவன் வில்லினும் என் கையிலுள்ள இந்த விஷ்ணுவின் வில் மேலானது; இதனை நாணேற்றி அம்பைத் தொடு" என்று பரசுராமன் சவால் விடுகிறான்.

இவ்விடத்தில், முன்னொரு சமயம், தங்கள் வில்களைக் கொண்டு நாராயணரும், சிவனும் போர் புரிந்த போது, நாரயணரே வென்றார் என்ற கதையும் கூறப் பட்டுள்ளதே! என்றால் ...

दृप्तस्य कोपकलुष्स्य वचः किलाद्यं
धर्मस्य विग्रहवतस्तु वचोद्वितीयम् ।
युध्दे क्वचित्तवदधिकत्वमरेर्वचश्च
त्वद्दत्तसत्यवरनिर्वहणाययुक्तम् ॥१८॥

த்ருப்தஸ்ய கோபகலுஷஸ்ய வச: கிலாத்யம்
தர்மஸ்ய விக்ரஹவதஸ்து வசோத்விதீயம் |
யுத்தே க்வசித்தவததிகத்வமரேர்வசச்ச
த்வத்தத்தஸத்யவரநிர்வஹணாயயுக்தம் || 18 ||

சிவனைக் காட்டிலும் நாராயணரே பெரியவர் என்பது கர்வமும், கோபமும், குழப்பமும் அடைந்துள்ள பரசுராமன் கூறுவதாகும்; மாறாகச் சிவபெருமானே யாவரினும் மேலானவர் என்பது (பாடல் 4) தர்மாத்மாவான இராமனின் கருத்தாகும்; இராமனின் கருத்தில் தான் உண்மை குடிகொண்டுள்ளது.

"இராவணனைக் கொல்லச் சிவனாலும் முடியாது; இராமனால் தான் இயலும்" என்று அனுமன் கூறுவதும் சிவனுடைய ஆற்றலை அவன் அறிந்து கூறுவதன்று; மாறாக இராவணனைப் பயமுறுத்தும் பலனைக் கருதிப் படைத்துக் கூறுவதே ஆகும்.

ஒரு ஸமயம் யுத்தத்தில் நாராயணன் சிவனை வென்றார் என்பதும் நாராயணனுக்குத் தான் அளித்த வரத்தின் படித் தான் தோற்றதாக இறைவன் நடித்துக் காட்டினார் என்பதையல்லாமல் வேறில்லை.

[உ-சு] "இனிமேல் அரசர்களைக் கொல்வதில்லை; ஆயுதம் எடுப்பதில்லை" என்ற தன் ப்ரதிக்ஞையையும் தற்சமயம் மீறும் அளவிற்குக் கலங்கிப் போயுள்ள பரசுராமனின் பிழைபட்டக் கருத்தினும், தன் கையில் உள்ள வைஷ்ணவாஸ்தத்திரத்தினும் இலவணன் கையில் உள்ள சிவானுக்கிரக சூலத்தைப் பெரிதாகக் கருதிய இராமனின் கருத்தே உண்மை நிலையாகும்.

சீதையைச் சமாதானப் படுத்துவதற்காக அவளிடம், "என்னை விட மட்டமான வேலைக்காரன் சுக்ரீவனிடம் இல்லை என்பதால் தான் நான் இங்கு அனுப்பப் பட்டுள்ளேன்" என்று கூறும் அனுமனிடம் காரிய சாதகமான பேச்சாற்றல் எப்போதும் உண்டு; ஆகவே இராவணனைப் பயமுறுத்துவதற்காக, "இராமனால் கொல்லத்தக்க உன்னை உருத்திரரால் காக்க முடியாது" என்ற அனுமன் வசனத்திலும் உண்மையைத் தேடுவது நம் குற்றமாகும் (இராவண வதத்தை இராமனைக் கொண்டு செய்வது சிவஸங்கல்பம் என்று நாம் முன்பே அறிந்து வைத்துள்ளோம் என்பதால்).

மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ளபடி, முன்பு மைனாக மலையில் அறுபதினாயிரம் ஆண்டு தவஞ் செய்து தன்னை மகிழ்வித்த நாராயணனுக்குத் தடைபடாத பல, பராக்ரமங்களை வரமளித்த சிவபெருமான், 'நம்முள் போர் நிகழ்ந்தாலும் நீயே வெற்றி பெறுவாய்' என்று, பிதா புத்ரனுக்கு விட்டுக் கொடுப்பது போல் வரம் அளித்துப் பின்னர் அவ் வரத்தின் படி லீலையாக நடித்தும் காட்டினார்.

[ப-வி] அன்பு வேண்டும் சிவபெருமான் அடியார் வேண்டிற்றே வேண்டும்; அவன் என்றும் தன் அடியார்க்கு எளியவன்; விறகு விற்பான்; ஓரிரவில் இருமுறை தூதுஞ் செல்வான்; தம்பெருமை தான் அறியாத் தன்மையனுக்குத் தன் அடியார்க்கு எளி வருதல் அவனது கருணையின் வெற்றி யன்றோ?

**இராமாயணம் சிவமகிமையை ஏன் இயம்ப வேண்டும்?**

इत्थं तव श्रुतिशत प्रथितं परत्वं
प्राधान्यतः स्मरहर प्रतिपादनीयम् ।
द्वारं तु रामचरितं कविना गृहीतं
रामायणे महितं उत्तमकाव्यरत्ने ॥१९॥

இத்தம் தவ ச்ருதிசத ப்ரதிதம் பரத்வம்
ப்ராதாந்யத: ஸ்மரஹர ப்ரதிபாதநீயம் |
த்வாரம் து ராமசரிதம் கவிநா க்ருஹீதம்
ராமாயணே மஹிதம் உத்தமகாவ்யரத்னே || 19 ||

இராமாயணம் வேதத்தின் உபப்ரம்மணம் என்பதாலேயே அனேக வேதங்களில் கூறப்பட்டுள்ள சிவபரத்துவத்தைத் தானும் த்வனித்துச் செல்கிறது.

**"சிவபரத்துவம் இராமாயணத்தின் குறிக்கோள் அன்று; மாறாக விபீஷ்ணனைப் போல இராமனைச் சரணம் அடைவதே முக்திக்கு உபாயம்" என்று கூறலாமா?**

केचिद्विभीषणसमाचरितं प्रधानं
कोणे श्रुतं प्रपदनं प्रतिपाद्यमाहु: ।
प्राधान्यमत्र कथमुत्तमनाम्नि काव्ये
वाच्यातिशायिविषयार्थि तदश्नुवीत ॥२०॥

கேசித்விபீஷண ஸமாசரிதம் ப்ரதானம்
கோணே ச்ருதம் ப்ரபதனம் ப்ரதிபாத்யமாஹு: |
ப்ராதான்யமத்ர கதமுத்தமநாம்நி காவ்யே
வாச்யாதிசாயிவிஷயார்த்தி ததச்னுவீத || 20 ||

இராமாயணத்தில் எங்கோ ஓரிடத்தில் கூறப்பட்டுள்ள விபீஷண சரணாகதியே முக்யார்த்தம் என்று சிலர் கூறுகிறார்கள்; அது தவறு; உத்தம காவியத்தில் யாண்டும் த்வனிக்கும் வ்யங்க்யமே முக்கியமல்லாமல் எங்கோ ஓரிடத்தில் கூறப்படும் வாச்யம் (விபீஷண சரணாகதி) எப்படி முக்கியமாகும்?

[உ-சு] வ்யங்க்யம் காவ்யத்தின் உயிர் (ஆன்மா) போன்றது; அது அருவமாக, இரகஸ்யமாக இருப்பினும் காவ்யத்தின் உடல் முழுவதும் பரவியே இருக்கும்; வாச்யமோ உடலில் ஓர் உறுப்புப் போன்றதே. ஶிவோத்கர்ஷ ஶிவபக்தியே இராமாயண மகா காவியத்தின் வ்யங்க்யம் என்பதை நிறுவியுள்ளோம்.

காவிய நயத்தை விடுங்கள்; மேலான பலனைக் கருதி விபீஷண சரணாகதியே இராமாயண தாத்பர்யம் என்பது சரியா?

स्याच्चेत्तदीशफलगौरवतः प्रधानं
इक्ष्वाकुनायक समाचरितं तथास्यात् ।
तच्चापि वायसकृतं धनलाभतोऽपि
दारात्मलाभमधिकं हि बुधा वदन्ति ॥२१॥

ஸ்யாச்சேத்ததீச பலகௌரவத: ப்ரதானம்
இக்ஷ்வாகுநாயக ஸமாசரிதம் ததாஸ்யாத் |
தச்சாபி வாயஸக்ருதம் தனலாபதோऽபி
தாராத்மலாபமதிகம் ஹி புதா வதந்தி || 21 ||

இராமாயணத்தில் முக்கியமாக மூன்று சரணாகதிகள் கூறப்பட்டுள்ளன;

1. அரசாட்சியை விரும்பி, விபீஷணன் இராமனிடம் செய்தது;
2. மனைவியை விரும்பி இராமன் சுக்ரீவனிடம் செய்தது;
3. உயிரை விரும்பி காகாசுரன் இராமனிடம் செய்தது. இம்மூன்றுள்ளும் முதலாவதைக் காட்டிலும் இரண்டாவதும்; இரண்டாவதைக் காட்டிலும் மூன்றாவதும் சிறந்ததென அறிஞர் கருதுவர்.

[உ-சு] ஆபத்தை விலக்கச் செல்வத்தையும்; தனத்தால் தாரத்தையும்; இவ்விரண்டாலும் தன்னையும் காக்க வேண்டும் என்பது சான்றோர் கொள்கையாகும். இதன் படிப் பார்த்தால் விபீஷண சரணாகதியே மட்டமானது என்று புலனாகும்.

**விபீஷண சரணாகதி ராஜ்யத்திற்காகச் செய்யப் படவில்லை; மோக்ஷத்திற்காகச் செய்யப் பட்டதே ஆகும் என்பது சரியா?**

तच्चेद्विमुक्तिफलकं फलगौरवं स्यात्
राज्येप्सयैव तु कृतं तदिति प्रसिद्धम् ।
श्रीरामचन्द्रपवनात्मजयोश्च सूक्त्या
साक्षाच्च तस्य वचनेन विभीषणस्य ॥२२॥

தச்சேத்விமுக்திபலகம் பலகௌரவம் ஸ்யாத்
ராஜ்யேப்ஸயைவ து க்ருதம் ததிதி ப்ரஸித்தம் |
ஸ்ரீராமசந்த்ர பவநாத்மஜயோச்ச ஸூக்த்யா
ஸாக்ஷாச்ச தஸ்ய வசநேந விபீஷணஸ்ய || 22 ||

ராஜ்யத்தை அடையும் ஆசையாலேயே விபீஷண சரணாகதி செய்யப்பட்டது என்பதை இராமனும், அனுமனும், விபீஷணனுமே பறை சாற்றுகிறார்கள்!

[உ-சு] விபீஷணன் இராமனிடம் சரணாகதி செய்ய வந்த சமயத்தில் முன் சொன்ன மூவரும் என்ன கூறினார்கள் என்பதைப் பார்ப்போம்:-

அனுமன் இராமனிடம்: வாலியைக் கொன்று அவன் தம்பிக்குத் தாங்கள் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்ததை அறிந்து அவ்வாறே தானும் பயன் பெறக் கருதியே இவன் (விபீஷணன்) இங்கு வந்திருக்கிறான்.

இராமன் எல்லோரையும் பார்த்து: அவன் (விபீஷணன்) ராஜ்யத்தை பெற விரும்புகிறான்; அவனுடைய அறிவு (நம்முடைய வெற்றிக்கு) பயன்படும். ஆகவே அவனைச் சேர்த்துக் கொள்ளலாம் (mutual consideration guarantees sincerity of purpose என்பதாம்).

மேலும் நாகபாசத்தினால் இராமலக்ஷ்மணர்கள் கட்டுண்ட சமயத்திலும் இராமன் கூறுவது: என்னுடைய வாக்கின் படி விபீஷணன் இலங்கைக்கு அரசனாக ஆக்கப் படவில்லை; எனவே எல்லோரும் என்னைப் பொய்யன் என்று பழிப்பார்கள்.

இதே சமயத்தில் விபீஷணன் கூறுவது: எந்த இருவரை நம்பி நான் அரசனாக ஆசைப்பட்டேனோ, அந்த இருவரும் இப்போது மரிக்கப் போகிறார்கள்.

இராமன் தனக்கு மோக்ஷம் அளிக்கக் கூடிய விஷ்ணுவே என்ற புத்தி சிறிதேனும் விபீஷணனுக்கு இருந்தால் அவன் இப்படிப் பேசுவானா? விஷ்ணுவுக்கு எத்தகைய ஆபத்தும் வாராது என்றல்லவா அவன் நினைத்திருக்க வேண்டும்?

விபீஷணர்களுக்கும் முக்தி ஸாதனமாகிய வைராக்யத்திற்கும் வெகு தூரம்!

लङ्का सुहृद्धन सुखानुभवादि सर्वं
 त्यक्तं मयेति तु वचो न ततो विरक्त्या ।
श्रीरामचन्द्रकरुणार्द्र कटाक्षलब्धे
 तत्रैव रागपिशुनः खलु वाक्यशेषः ॥२३॥

லங்கா ஸுஹ்ருத்தன ஸுகானுபவாதி ஸர்வம்
த்யக்தம் மயேதி து வசோ ந ததோ விரக்த்யா |
ஶ்ரீராமசந்த்ர கருணார்த்ர கடாக்ஷலப்தே
தத்ரைவ ராகபிசுந: கலு வாக்யசேஷ: || 23 ||

'இலங்கையில் உள்ள நண்பர்கள், செல்வம், இன்பம் எல்லாமே என்னால் விடப்பட்டன!' என்று விபீஷணன் ஓரிடத்தில் கூறியிருப்பது உவர்ப்பினால் அன்று.

[உ-சு] "எனது ராஜ்யம், ஜீவிதம், சுகம் எல்லாமே தங்களிடமே உள்ளன!" என்று அடுத்து வரும் விபீஷண வசனத்திலிருந்தே அவற்றின் மீது அவனுக்குள்ள ஆசையும், அவை அனைத்தையும் இராமனின் துணை கொண்டு பெற்று விடத் துடிப்பதும் புலனாகும்; எனவே முக்தி இச்சை என்பது விபீஷணர்களிடம் சிறிதும் இராது.

இராமபிரானால் பரமப்ரயோஜனத்தை அடையாமல் அல்ப ப்ரயோஜனத்தை அடைந்து விராமித்ததே விபீஷண சரணாகதி, இராமாயண தாத்பர்யம் ஆகாது என்பதற்குச் சான்று!

ज्ञात्वातदीप्सितमतोऽथ रघुप्रवीरः
तेनैव रावणबलादि च वाचयित्वा ।
कृत्वा च रावणतदिष्टवध प्रतिज्ञां
राज्याधिपत्यमददादभिषेकपूर्वम् ॥२४॥

க்ஞாத்வாததீப்ஸிதமதோऽத ரகுப்ரவீர:
தேநைவ ராவணபலாதி ச வாசயித்வா |
க்ருத்வா ச ராவணததிஷ்டவத ப்ரதிக்ஞாம்
ராஜ்யாதிபத்யமததாத் அபிஷேக பூர்வம் || 24 ||

விபீஷணன் விரும்பிய அல்ப ப்ரயோஜனத்தை அறிந்திருந்த படியாலேயே, இராமனும் அவனைக் கொண்டே இராவணனின் பலாபலங்களைக் கேட்டறிந்து, அவன் விரும்பியபடியே இராவணனைக் கொன்று, இராஜ்யம் அளிப்பதாக வாக்களித்து, அளித்த வாக்கின் படியே நடந்தும் கொண்டார் அல்லவா?

[உ-சு] இராவணன் இருக்கும் போதே அவனுடைய இலங்காதிபத்தியத்தை இராமன் விபீஷணனுக்கு அளித்துப் பட்டாபிஷேகம் செய்ததும், 'இராவணனைக் கொல்லாமல் அயோத்தியுள் நுழைய மாட்டேன்' என்று தன்

மூன்று தம்பிகள் மேல் ஆணையிட்டதும், முன்னதாக விபீஷணனிடமிருந்து இராவணனின் பல அபலங்களை நன்றாக அறிந்த விட்ட படியாலேயே ஆகும். எனவே விபீஷண சரணாகதி மோக்ஷத்திற்காச் செய்யப் பட்டதில்லை என்று உறுதியாகும் போதே அதுவே இராமாயணத்தின் ஸாரம் என்று எப்படி ஆகும்?

**சிவமகிமை என்னும் வஸ்து த்வநி இராமாயணம் முழுவதும் காணப்படுவதால், அதுவே, சிவபாரம்யமே ஸாரார்த்தமாகும்.**

**மூவருக்கும் வணக்கம்!**

प्राचेतसाय कवये प्रथमाय तस्मै
तत्काव्यहारतरळाय च राघवाय ।
विश्वात्मने तदुभयस्थिर भावलक्ष्य
मुख्यास्पदाय विभवे च नमश्शिवाय ॥२५॥

ப்ராசேதஸாய கவயே ப்ரதமாய தஸ்மை
தத்காவ்யஹாரதரளாய ச ராகவாய |
விச்வாத்மனே ததுபயஸ்திர பாவலக்ஷ்ய
முக்யாஸ்பதாய விபவே ச நமச்சிவாய || 25 ||

வருண புத்திரரும், முதற்கவிஞருமான வால்மீகிக்கும், அவர் இயற்றிய இராமாயண காவ்யத்தின் மாலை போன்றுள்ள இராகவனுக்கும், இவ் இருவரின் பக்திக்கும் இலக்காக உள்ளவரும், உலக வடிவினரும், விரிந்தவரும் ஆகிய சிவ பெருமானுக்கும் நமஸ்காரம்!

அணை அலை சூழ்கடல் அன்று அடைத்து வழி செய்தவன்,
பணை இலங்கும் முடிபத்திறுத்த பழி போக்கிய -
இணை இலி என்றும் இருந்த கோயில் இராமேச்சரம்
துணை இலி தூமலர்ப் பாதம் ஏத்தத் துயர் நீங்குமே.

- திருஞானசம்பந்தர்

**சிவமயம்**



ஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்திராள்

# श्री भारत तात्पर्य सङ्ग्रहस्तोत्रम्

श्रीबादरायणमुनिः स्वयमेवविष्णुः
पार्थच्छलात्तमधिकृत्य कृते प्रबन्धे ।
तस्यापि नित्यमहितं शशिभूषणत्वां
आम्रेडयन् गुरुरदर्शयदादि तत्त्वम् ॥१॥

मोहाभिभूतमखिलं जगदाविरिञ्चं
त्वामेकमेव भगवन् रहितं च तेन ।
विख्याप्यमंकणक दिव्यकथानुषक्त्या
त्वां ब्रह्म तेन च मुनिः स्फुटयांबभूव ॥२॥

तस्माच्च मोहतदभावकृताद्विशेषात्
जन्मस्थिति प्रलय भागखिलं त्वदन्यत् ।
तत्कर्तृवस्तु परमं त्वमिति प्रबोधं
जातं विभावयति तस्य तदीय वाचा ॥३॥

कैलासशैलशिखरे हरिपार्थदृष्टं
त्वां ब्रह्म नाथ परमं समुदीर्य साक्षात् ।
तल्लक्षणं त्वयमनन्यतदीय धर्म
क्रान्ते कियच्च भवति स्फुटमाचचक्षे ॥४॥

नारायणस्य सुचिरं त्वदुपासकस्य
यत्ब्रह्मभावमवदत्तव भावनाप्तम् ।
यत्ते स्तुतिं तदुदितां परभावगर्भां
त्वां ब्रह्म तेन च मुनिः स्फुटयांचकार ॥५॥

मूलं कृष्णो ब्रह्म च ब्राह्मणाश्चेत्
यादावेवं ब्रह्मभावं महेश ।
पार्थानां ते नित्यसंरक्षकस्य
व्यासस्तत्रोद्धाटयामास शम्भो ॥६॥

ब्रह्मा विष्णुश्शंकरश्चेति देवाः
कर्तारो ये सर्गरक्षालयानाम् ।
तेषां सृष्टिं संहृतिं च त्वदीच्छा
धीनामूचे द्योतयन् ब्रह्मतत्त्वम् ॥७॥

## ஸ்ரீ பாரத தாத்பர்ய ஸங்க்ரஹஸ்தோத்ரம்

ஸ்ரீபாதராயணமுநி: ஸ்வயமேவவிஷ்ணு:
பார்த்தச்சலாத்தமதிக்ருத்ய க்ருதே ப்ரபந்தே |
தஸ்யாபி நித்யமஹிதம் சசிபூஷணத்வாம்
ஆம்ரேடயன் குருரதர்சயதாதி தத்வம் || 1 ||

மோஹாபிபூதமகிலம் ஜகதாவிரிஞ்சம்
த்வாமேகமேவ பகவந் ரஹிதம் ச தேன |
விக்யாப்ய மம்கணக திவ்யகதானுஷக்த்யா
த்வாம் ப்ரஹ்மதேன ச முநி: ஸ்புடயாம்பபூவ || 2 ||

தஸ்மாச்ச மோஹததபாவக்ருதாத்விசேஷாத்
ஜன்மஸ்திதி ப்ரலய பாககிலம் த்வதன்யத் |
தத்கர்த்ருவஸ்து பரமம் த்வமிதி ப்ரபோதம்
ஜாதம் விபாவயதி தஸ்ய ததீய வாசா || 3 ||

கைலாஸசைலசிகரே ஹரிபார்த்தத்ருஷ்டம்
த்வாம் ப்ரஹ்ம நாத பரமம் ஸமுதீர்ய ஸாக்ஷாத் |
தல்லக்ஷணம் த்வயமநன்யததீய தர்ம
க்ரான்தே கியச்ச பவதி ஸ்புடமாசசக்ஷே || 4 ||

நாராயணஸ்ய ஸுசிரம் த்வதுபாஸகஸ்ய
யத்ப்ரஹ்மபாவமவதத்தவ பாவனாப்தம் |
யத்தே ஸ்துதிம் ததுதிதாம் பரபாவகர்பாம்
த்வாம் ப்ரஹ்ம தேந ச முநி: ஸ்புடயாம்சகார || 5 ||

மூலம் க்ருஷ்ணோ ப்ரஹ்ம ச ப்ராஹ்மணாச்சேத்
யாதாவேவம் ப்ரஹ்மபாவம் மஹேச |
பார்த்தாநாம் தே நித்யஸம்ரக்ஷகஸ்ய
வ்யாஸஸ்தத்ரோத்தாடயாமாஸ சம்போ || 6 ||

ப்ரஹ்மா விஷ்ணுச்சங்கரச்சேதி தேவா:
கர்தாரோ யே ஸர்கரக்ஷாலயாநாம் |
தேஷாம் ஸ்ருஷ்டிம் ஸம்ஹ்ருதிம் ச த்வதீச்சா
தீநாமூசே த்யோதயந் ப்ரஹ்மதத்த்வம் || 7 ||

विशालाक्षः स्थाणुर्द्रुहिणतनयः संहरणकृत्
    सरोजाक्षक्रोधप्रभव इति वैशेषिकपदम् ।
विभूतित्वज्ञप्त्यै किमपिनिहतन्नाथ नियतं
    निकर्षोक्तिस्ताभ्यां भवत इति बुध्दिं निरसितुम् ॥८॥

यत्रेदृशं नास्ति विभूति रुद्रता
    विज्ञापकं नाथ विशेषकं पदम् ।
साऽपि स्वधर्म ग्रहमानवैशसात्
    सर्वेश्वरं त्वां न निकर्षगीः स्पृशेत् ॥९॥

गीतासुगूढमुदितं भवतः परत्वं
    नैवस्फुटं तदत एव हि सव्यसाची ।
गीथार्थमेव सहसापुनरप्यपृच्छत्
    तद्बोधनार्थमुदिता हरिणानुगीता ॥१०॥

तमेवचाद्यं पुरुषं प्रपद्ये -
    त्युदीरितं यन्मधुकैटभद्विषा ।
तमेव सर्वान् भ्रमयन्तमीश्वरं
    महाफलाप्त्यै शरणं व्रजेति यत् ॥११॥

एतेन कृष्णस्य समं मुमुक्षुणा
    स्वाराधनीयः प्रतिभासते परः ।
सर्वस्य चाहं हृदिसन्निविष्टे -
    त्याद्यैस्तु विष्णुः तदुदेतिसंशयः ॥१२॥

इत्थमस्य यदि संशयो भवेत्
    अन्यथाग्रहणमेव वा पुनः ।
नाग्रहीन्मदुपदिष्ट एव
    इत्यग्रहं हरिरवोचदुत्तरे ॥१३॥

उक्त्वा च संशयविपर्ययोः निरासं
    चक्रे हरिश्चतुरया द्रुतमुक्तिभङ्ग्या ।
शक्यं तदद्य न मया भणितुं यथोक्तं
    योगाधिरूढमनसा नबहिर्दशेति ॥१४॥

விசாலாக்ஷ: ஸ்தாணுர்த்ருஹிணதநய: ஸம்ஹரணக்ருத்
ஸரோஜாக்ஷக்ரோதப்ரபவ இதி வைசேஷிகபதம் |
விபூதித்வக்ஞ்ப்த்யை கிமபிநிஹதந்நாத நியதம்
நிகர்ஷோக்திஸ்தாப்யாம் பவத இதி புத்திம் நிரஸிதும் || 8 ||

யத்ரேத்ருசம் நாஸ்தி விபூதி ருத்ரதா
விக்ஞாபகம் நாத: விசேஷகம் பதம் |
ஸாऽபி ஸ்வதர்ம க்ரஹமானவைசஸாத்
ஸர்வேச்வரம் த்வாம் ந நிகர்ஷகீ: ஸ்ப்ருசேத் || 9 ||

கீதாஸூகூடமுதிதம் பவத: பரத்வம்
நைவஸ்புடம் ததத ஏவ ஹி ஸவ்யஸாசீ |
கீதார்தமேவ ஸஹஸாபுநரப்யப்ருச்சத்
தத்போதநார்த்தமுதிதா ஹரிணானுகீதா || 10 ||

தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே -
த்யுதீரிதம் யந்மதுகைடபத்விஷா |
தமேவ ஸர்வாந் ப்ரமயந்தமீச்வரம்
மஹாபலாப்த்யை சரணம் வ்ரஜேதி யத் || 11 ||

ஏதேன க்ருஷ்ணஸ்ய ஸமம் முமுக்ஷுணா
ஸ்வாராதநீய: ப்ரதிபாஸதே பர: |
ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதிஸந்நிவிஷ்டே -
த்யாத்யைஸ்து விஷ்ணு: தது தேதிஸம்சய: || 12 ||

இத்தமஸ்ய யதி ஸம்சயோ பவேத்
அந்யதாக்ரஹணமேவ வா புந: |
நாக்ரஹீந்மதுபதிஷ்ட ஏவ
இத்யக்ரஹம் ஹரிரவோசதுத்தரே || 13 ||

உக்த்வா ச ஸம்சயவிபர்யயோ: நிராஸம்
சக்ரே ஹரிஸ்சதுரயா த்ருதமுக்திபங்க்யா |
சக்யந் ததத்ய ந மயா பணிதும் யதோக்தம்
யோகாதிரூடமனஸா நபஹிர்த்ருசேதி || 14 ||

अधुना तदुपास्य संशयाद्यपगच्छत्विति
सौहृदं स्मरन् ।
इति होक्तमिहश्रुतंमयेत्युपदेश्ये
कियदाह तत्र सः ॥१५॥

तस्य स्थिरीकरणमात्मनि पूर्ववृत्तं
स्वस्यैवबुद्धिमनसी द्विजदम्पती च ।
कृत्वानुयोजनतदुत्तरयोरनुक्त्वा
विख्याप्यतद्विवरणं च चकार शौरिः ॥१६॥

अग्रेतत्त्वंपरं किं त्वहमपि च कुतः
सर्व भूतानि चेति
प्रश्नेशिष्यस्य तस्मै गुरुकृतमखिलं
ब्रह्मतत्त्वोपदेशम् ।
मोक्षं शिष्यस्य चोक्त्वापुनरपिविजये
नानुयुक्तो गुरुः कः
शिष्योवेति स्वमेवेश्वरगुरुमवदत्
स्वस्यचित्तं स्वशिष्यम् ॥१७॥

ब्रह्मण्येवं स्वचेतो मियमन -
समुपस्थापितं ग्रन्थिमोक्षं
स्वेनैवोक्तं विमृश्य प्रपदनवचनं
तत्प्रतीतार्थनिष्ठम् ।
यत्तत्सर्वस्यचाहं हृदिमुखवचनं
तत्पुनश्शास्त्रदृष्ट्या
इत्येवं पार्थोऽवगच्छेदिति
विवृतिरकार्यत्र गीताशयस्य ॥१८॥

तच्च ब्रह्मप्रपत्यास्पदमसुररिपोः
ईश्वरत्वं न चान्यः
नाहं कच्चित्प्रपद्ये विबुधमितिवचः
श्रोतुरुत्कृष्टभक्त्यै ।
सेवन्ते नीलकन्ठं परिमितफलदं
न प्रबुद्ध्या इतीदं
ब्रह्मैक्यध्यातृ विद्वद्विषय -
मितरथा नास्ति भूयोनुरोधः ॥१९॥

इत्थं चक्रे भारतं यः प्रबन्धं
व्यक्त्या व्यासश्शाम्भवोत्कर्षवर्षी ।
धन्यधन्यधन्य मूर्धन्य धन्यस्तं
शौरिंतत्साक्षिणं चानतोऽस्मि ॥२०॥

அதுனா ததுபாஸ்ய ஸம்சயாத்யபகச்சத்விதி
ஸௌஹ்ருதம் ஸ்மரன் |
இதி ஹோக்தமிஹச்ருதம்மயேத்யுபதேச்யே
கியதாஹ தத்ர ஸ: || 15 ||

தஸ்ய ஸ்திரீகரணமாத்மநி பூர்வவ்ருத்தம்
ஸ்வஸ்யைவபுத்திமனஸீ த்விஜதம்பதீ ச |
க்ருத்வாநுயோஜநததுத்தரயோரநுக்த்வா
விக்யாப்யதத்விவரணம் ச சகார சௌரி: || 16 ||

அக்ரேதத்வம்பரம் கிம் த்வஹமபி ச குத:
ஸர்வ பூதாநி சேதி
ப்ரச்னேசிஷ்யஸ்ய தஸ்மை குருக்ருதமகிலம்
ப்ரஹ்ம தத்வோபதேசம் |
மோக்ஷம் சிஷ்யஸ்ய சோக்த்வாபுநரபிவிஜயே
நாநுயுக்தோ குரு: க:
சிஷ்யோவேதி ஸ்வமேவேச்வரகுரும் அவதத்
ஸ்வஸ்யசித்தம் ஸ்வசிஷ்யம் || 17 ||

ப்ரஹ்மண்யேவம் ஸ்வசேதோ மியமந -
ஸமுபஸ்தாபிதம் க்ரந்திமோக்ஷம்
ஸ்வேனைவோக்தம் விம்ருச்ய ப்ரபதனவசனம்
தத்ப்ரதீதார்தநிஷ்டம் |
யத்தத்ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதிமுகவசனம்
தத்புநச்சாஸ்த்ரத்ருஷ்ட்யா
இத்யேவம் பார்தோऽவகச்சேதிதி
விவ்ருதிரகார்யத்ர கீதாசயஸ்ய || 18 ||

தச்ச ப்ரஹ்மப்ரபத்யாஸ்பதமஸுரரிபோ:
ஈச்வரத்வம் ந சாந்ய:
நாஹம் கச்சித்ப்ரபத்யே விபுதமிதிவச:
ச்ரோதுருத்க்ருஷ்டபக்த்யை |
ஸேவந்தே நீலகண்டம் பரிமிதபலதம்
ந ப்ரபுத்த்யா இதீதம்
ப்ரஹ்மைக்யத்யாத்ரு வித்வத்விஷய மிதரதா
நாஸ்தி பூயோநுரோத: || 19 ||

இத்தம் சக்ரே பாரதம் ய: ப்ரபந்தம்
வ்யக்த்யா வ்யாஸ: சாம்பவோத்கர்ஷவர்ஷீ |
த்வன்ய த்வன்ய த்வன்ய மூர்த்தன்ய தன்யஸ்தம்
சௌரிம் தத்ஸாக்ஷிணம் சாநதோऽஸ்மி || 20 ||

## மகாபாரத உள்ளுறைச் சுருக்கம்

### கண்ணன் வழிபட்ட கடவுள்

திருமாலின் அவதாரங்களில் ஒருவர் வியாஸ முனிவர்; பாதராயணர் என்றும் இவருக்குப் பெயர் உண்டு. இவர் படைத்த பல நூல்களிலும் தாம் வழிபடும் பெருங் கடவுளாகிய சிவபெருமானின் மகிமையை வெளிப்படுத்தியதைப் போலவே, மகாபாரதத்திலும் அப்பெருமானின் மேன்மையையே உலகிற்கு உணர்த்தியுள்ளார்.

பாண்டவர்களின் கதையாகப் பார்க்கப்படும் பாரதம், உண்மையில் அதன் சூத்திரதாரியாகிய கண்ணனின் சிறப்பையே காட்டுகிறது. சூத முனிவரும் இதே கருத்தைக் கொண்டிருக்கிறார். கண்ணன் என்ற அவதார நிலையிலும், பரவாசுதேவன் என்ற நிலையிலும் விஷ்ணுவானவர் சிவபெருமானை ஆராதித்தே பல வரங்களைப் பெற்றார் என்று பல இடங்களில் பாரதம் எடுத்துக் காட்டுவதால், வ்யஞ்ஜனை என்ற உத்தியால் சிவமே மேலான பொருள் என்ற உண்மையை நிறுவுவதற்காக உண்டாகியுள்ளது அது என்றே கூறலாம்.

கண்ணன் சிவபெருமானைப் பூசித்த விஷயம், மகாபாரதத்துள் ஸௌப்திக பர்வாவிலும், ஆதிபர்வா சுபத்திரா பரிணயத்துள்ளும், ஆனுசாஸநிக பர்வாவில் பாசுபத விரத அனுஷ்டான வர்ணனையிலும், துரோண பர்வாவில் வியாஸ அச்வத்தாம ஸம்வாதத்திலும், தெளிவாகவும், உறுதியாகவும் சொல்லப்படுகிறது.

மேலும், பாரதசேஷம் என்று கருதப்படும் ஹரிவம்சத்திலும், பாரிஜாத ஸம்ஹிதை, மற்றும் கைலாஸ யாத்திரை போன்ற பல இடங்களிலும், கண்ணன் சிவனை வழிபட்டது அறியப்படவுள்ளது.

ஆரண்ய பர்வாவில், தீர்த்தயாத்ரா விதானத்தில், பரவாசுதேவன் என்ற நிலையிலும், திருமால் சிவனைப் பூசித்தது கூறப்பட்டுள்ளது.

ஆனுசாஸநிக பர்வாவில். உபமன்யு ரிஷியின் வசனங்களாலும் இவ்விஷயம் உணர்த்தப்படுகிறது.

மகாபாரதம் திருமாலின் பெருமைகளைப் பரக்கக் கூறி அத்திருமாலுக்கும் சிவபெருமானே உபாஸ்யர் (வழிபடு கடவுள்) என்று காட்டுவதால், ஒப்புயர்வற்ற பரதத்துவம் சிவமே என நிறுவப்படுகிறது.

[ப-வி] சிவபுண்ணியம் மிக்கவர் திருமால்; 'நலமுடைய நாரணன்' என்று மணிவாசகரால் பாராட்டப்படுபவர். அவர் ப்ருகு முனிவரால் பல பிறவிகளைப் பெற்றார்; ஆயினும் சிவனருளால் இப் பிறவிகளால் பெருமையையே உற்றார். உலகங்களால் பூசிக்கப்படும் இவரும் எப்போதும் சிவனையே பூசிக்கிறார் என்பது எல்லா நூல்களும் காட்டும் செய்தி.

"ஞாலமும் மேலை விண்ணொடு உலகேழும் உண்டு
குறளாய் ஓர் ஆலின் இலைமேல்,
பாலனும் ஆயவற்கோர் பரமாய மூர்த்தி
அவனாம் நமக்கொர் சரணே!" என்றும்

"தேசங்கள் தொழநின்ற திருமாலால் பூசனை" என்றும் அப்பரடிகள் கூறுவதே அனைத்து நூற் கருத்தாகும்.

## மயக்கம் இல்லாதவன் மகேசன்

ஆரண்ய பர்வாவில் மங்கணகர் என்ற சித்தரின் கதை கூறப் பட்டுள்ளது. ஒரு தர்பைப் புல்லால் காயமுற்ற அவர் கையிலிருந்து சாகரஸம் பெருகி வெள்ளமாக ஓடியது. அதைக் கண்டு அவர் மகிழ்ச்சியால் நர்த்தனம் செய்ய, அவரைத் தொடர்ந்து உலகமே நர்த்தனம் செய்ய, இவற்றைக் கண்டு கலக்கமுற்ற ப்ரம்மன் முதலிய தேவர்களும் பிறரும் சிவனை வேண்ட, மகேசன் மங்கணகரின் ஆட்டம் ஓயும் படி அடக்கினார். மங்கணகரும் இறைவனின் கருணையைத் துதித்துப் பாடினார் என்று பாரதம் உரைக்கிறது. இந்த விருத்தாந்தத்திலிருந்து, மோகத்தை (மயக்கத்தை) அடையும் யாவரும் ப்ரம்மன் உட்பட ஜீவர்களே. மயக்கத்திற்கு அப்பாற்பட்டவரும், உலகைக் காக்கவேண்டி அம்மயக்கத்தைப் போக்க வல்லவருமான மகேசனே பரம்பொருள் என்று வியாச முனிவர் காட்டுகிறார்.

[ப-வி] திருமாலின் மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிங்க, த்ரிவிக்ரம அவதாரங்களால் உலகம் கலங்கிய போதும், தாருகனைக் கொன்ற காளியின் ஆட்டத்தால் நடுங்கிய போதும், சிவபெருமானே ஒவ்வோர் உபாயத்தால் இவர்களை அடக்கி, உலகினைக் காத்தார் என்று புராணங்கள் கூறும். திருமாலை உலகைக் காக்கும் கடவுள் என்பது மிகையே. சிவபெருமானின் திருவருளாலேயே அவர் காத்து வருவதே உண்மை.

## ப்ரஹ்ம லக்ஷணங்கள் பொருந்தியவன் யார்?

பாசுபத அஸ்த்ர ப்ரயோக வழிமுறைகளை அறிவதற்காகக் கண்ணனும் அர்ஜுனனும் கயிலை மலையை அடைந்து பெருமானை வழிபட்டுத் துதித்தனர்; அவர்கள் பெருமானை வாயார வாழ்த்திய குணங்களால் சிவபெருமானின் பரப்ரம்ஹ லக்ஷணங்களைப் பாரதம் காட்டுகிறது:-

"யோகினாம் பரமம் ப்ரஹ்ம" (யோகியரின் பெருங்கடவுள்)
"வேதவிதாம் நிதிம்" (அந்தணரின் அருஞ் செல்வம்)
"தமஸ: பரமம் ஜ்யோதி:" (இருளைக் கடந்த சுடர்)

என்பன போன்ற ப்ரம்ஹ லக்ஷணங்களால் சிவனே ஸநாதன ப்ரஹ்மம் (அழிவற்ற பரம்பொருள்) என்று மகாபாரதம் காட்டி விடுகிறது.

## சிவனை வழிப்பட்டால் சிவமாகலாம்!

துரோண பர்வாவில், நாராயணர், மைனாக மலையில் பல வருடங்கள் கடுந்தவஞ் செய்து, அதன் பயனாக ப்ரம்ஹபூதர் ஆனார் என்று சொல்லியுள்ளது. ஆகவே வியாசர் நாராயணரைப் பரப்பிரமம் என்று ஓரிடத்தில் சொல்லியிருப்பதும் அவர் சிவனை வழிபட்டதின் பலனேயாகும்! 'சிவனே பரம்பொருள்' என்று நாராயணர் துதித்ததையும் வியாசர் உடன் கூறுவதால் இவ்வுண்மையை உணரலாம்.

நெடுங்காலம் நாராயணர் சிவனையே தியானம் செய்த காரணத்தால் 'தத் க்ரது' நியாயப்படி அவர் சிவ ஸ்வரூபத்தை அடைந்தார்; ஏன் எனில் அத் தன்மையை அடைய வேறு உபாயமே இல்லை!

[ப-வி]

"பாவிப்பார் மனம் பாவிக் கொண்டானை"
"உன்னைப் போல் என்னைப் பாவிக்க மாட்டேன்"
"சேர்வார் தாமே தானாகச் செயுமவன்"
"சலம் இலன் சங்கரன்"
"நான் எனில் தான் எனும் ஞானத்தார்"
"சிந்தையுட் சிவம தானார்"
"சிவமான வாபாடி"
"சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்"

என்பன போன்ற திருமுறைகள் சிவோகம் பாவனையால் சிவ ஸ்வரூபம் அடையலாகும் என்பதைக் காட்டும்.

**வியாஸர் ப்ரஹ்மமாகக் கருதுவது சிவனையே!**

பாரதத்தின் ஆரம்பத்தில் யுதிஷ்டிரரைத் தர்மமயமான ஒரு மரம் என்றும், அர்ஜுனன் அதன் அடிமரம் என்றும், பீமன் கிளை என்றும், நகுல சகாதேவர்கள் மலரும் பழமும் என்றும் கூறி

"மூலம் க்ருஷ்ணோ ப்ரஹ்ம ச ப்ராஹ்மணாஸ்ச" என்று -> கண்ணன், ப்ரம்மம் மற்றும் அந்தணர்கள் அம்மரத்தைக் காக்கும் வேர் போன்றவர்கள் என்றும் வியாசர் கூறுகிறார்.

பாண்டவர்களைப் பிறர் யாரைக் காட்டிலும் அதிகமாகச் சிவபெருமானே காத்து வந்தார் என்றே பாரதம் காட்டுவதாலும், பஞ்ச இந்திரர்களே சிவனது ஆணையால் பஞ்ச பாண்டவராயினர் என்பதாலும், இங்கு ப்ரஹ்ம சப்தத்தால் சிவபெருமானே குறிக்கப் படுவது வெளிப்படை! எனவே வியாசர் சிவனையே ப்ரஹ்ம சப்தத்தால் குறிப்பிட விரும்புவது தெரிகிறது.

[ப-வி] வேதங்களில் ப்ரஹ்ம சப்தத்தால் அறியப்படுல் பரம் பொருள் ஆகமங்களில் சிவ சப்தத்தால் அறியப்படும் என்று சைவாகமங்கள் கூறும்.

அயன், மால் உள்ளிட்ட தேவர்களைப் படைத்து, காத்து, அழிப்பவன் யார்?

ஆனுசாஸநிக பர்வாவில், சிவனே தன் வலப்பக்கத்தில் இருந்து ப்ரம்மனையும், இடப்பக்கத்திலிருந்து விஷ்ணுவையும், யுகாந்தத்தில் (இதயத்திலிருந்து - பத்மபுராணம்) உருத்திரனையும் உண்டாக்கினார் என்று கூறப்பட்டுள்ளது.

இம்மூவரையும் அவரே காத்து வருகிறார் என்பது சாந்தி பர்வாவில் கூறப்பட்டுள்ளது. அவ்வண்ணமே அவரே இம்மூவரையும் ஒடுக்குகிறார் என்பதும் உரைக்கப்பட்டுள்ளது.

"யதோ வா இமானி பூதானி ஜாயந்தே ..." என உபநிஷதத்தில் வருணிக்கப்படும் ப்ரம்ஹலக்ஷணம் சிவபெருமானிடம் மட்டுமே பொருந்துவதாக வியாசர் காட்டுகிறார்.

[ப-வி]

"படைப்போன் படைக்கும் பழையோன்; படைத்தவை
காப்போன் காக்கும் கடவுள்; காப்பவை
கரப்போன் கரப்பு; அவை கருதாக்
கருத்துடைக் கடவுள்" (8-3-13-16)

என்ற திருவாசகமும் காண்க!

### தேவர் முதலிய உயிர்களைச் செலுத்துபவன் யார்?

ஐந்து இந்திரர்களையும் பூமியில் ஐந்து பாண்டவர்களாக அவதரிக்கும்படித் தூண்டிய சிவபெருமான், அவர்களுக்குத் துணை புரிவதற்காக நாராயணரையும் தூண்டினார் என்று காணப்படுகிறது. ஆகவே மிக உயர்ந்த தேவர் உள்ளிட்ட எல்லா உயிர்களையும் ப்ரேரிப்பவர் - வினைப் பயனை ஊட்டி நடத்துபவர் அவரே என்று பாரதம் காட்டுகிறது!

[ப-வி] சிவ தத்துவத்தையே போதிக்கும் சுவேதாசுவதர உபநிஷத்,

"போக்தா, போஜ்யம், ப்ரேரிதாரம் ச மத்வா
ஸர்வம் ப்ரோக்தம் த்ரிவிதம் ப்ரஹ்ம மேதத்"

என்ற இடத்தில் சிவனைப் பிரேரிதா என்றே காட்டுகிறது.

### கீதா ரஹஸ்யம்

கண்ணன் சிவயோகத்தில் இருந்து உபதேசித்த பகவத் கீதையில் பல இடங்களில் தன்னையே பரம்பொருள் என்று நினைக்கும்படி விஷயங்களை எடுத்துச் சொல்லி இருக்கிறார்; இருப்பினும் ஓரிடத்தில், தானும் ஆதி புருஷன் ஒருவனைச் சரணம் புகுவதாகக் கூறியுள்ளார்:-

"தத: பதம் தத்பரி மார்கிதவ்யம்
யஸ்மின் கதா ந நிவர்த்தந்தி பூய:
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணி"

இதன் பொருள்: எந்த (சிவ) பதத்தை எய்தினால், மீண்டும் இங்கு வரவேண்டாமோ, அந்த முதற் புருஷனை நான் சரணமடைகிறேன். தொன்று தொட்டு இவ்வாழ்வு அவனிடமிருந்தே தோன்றுகிறது.

அர்ஜுனனையும் அந்த ஈஸ்வரனைச் சரணம் புகும்படிக் கண்ணன் தூண்டுகிறார்:-

"ஈஸ்வர: ஸர்வ பூதானாம் ஹ்ருத்தேசே அர்ஜுன திஷ்டதி |
ப்ராமயன் ஸர்வ பூதாநி யந்த்ராரூடாநி மாயயா ||
தமேவ சரணம் கச்ச ஸர்வ பாவேன பாரத |
தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ||"

இதன் பொருள்: எல்லா உயிர்களின் இதயத்திலும் இருந்து கொண்டு, மாயா இயந்திரத்தில் மாட்டிக் கொண்டுள்ள அவ்வுயிர்களை இறைவன் மயக்கி (சுழற்றி) வருகிறான்; அர்ஜுனா! எல்லா விதங்களாலும் நீ அவனையே தஞ்சம் புகுவாயாக! அவனது அருளால் மேலான அமைதியும், நிலைத்த பேறும் கிட்டும் என்பதாம்.

இங்ஙனம் தனக்கு வேறானதும் மேலானதும் ஆன சிவபத ஸ்வரூப பரமாத்மாவைக் கீதையின் இடையில் கண்ணன் குறித்துக் காட்டியுள்ளார். இருப்பினும்,

1. தன்னையே கடவுளாகப் பல இடத்தும் கண்ணன் கூறுவதோடு இச்சிவபத பரம்பொருளைச் சமரஸப் படுத்த முடியாது - எவராலுமே - என்பதாலும்,

2. யுத்த அவஸரத்தில் இருந்த அர்ஜுனனுக்குக் கண்ணன் தன்னைக் கடவுளாக உரைத்ததெல்லாம் சிவயோகத்தாலேயே என்பது புரியாது போனதாலும்,

3. கண்ணனிடம் அப்போது பற்றில்லாமல் தானே யுத்தஞ் செய்ய வேண்டும் என்ற அகந்தையாலும் கவனமின்மையால் ஒழுங்காகக் கேட்டு உணராத கீதார்த்தத்தைத் தற்போது தான் மறந்து விட்டதாக அர்ஜுனன் முறையிட, கண்ணன் அனுகீதையின் மூலம் அதனை மீண்டும் உபதேசிப்பதாகப் பாரதம் உரைக்கிறது.

## அனுகீதை காட்டும் கீதைப் பொருள்

முன்பு போல் அசிரத்தையாக இல்லாமல், தற்போது அதிக கவனத்துடன் அனுகீதையை அர்ஜுனன் கேட்கவேண்டி உணர்த்துவதற்காக, "முன்பு யோகத்தால் உரைத்ததைப் போலத் தற்போது இயலாது!" என்று கோபங்காட்டி, வேறு உத்திகளால் கீதைப் பொருளைக் கண்ணன் உரைக்கிறான். இதனால் இங்கு (அனுகீதையில்), தெளிவாக, முன்னர்

(கீதையில்) தான் உரைத்ததெல்லாம் சிவயோகத்தால், சிவமாகத் தன்னைப் பாவித்து உரைத்தவையே "கீதையில் எனக்கு நான் படைத்துக் கொண்ட மகிமையெல்லாம் மகேசனுடையவே" என்று கண்ணன் விளக்குகிறான்.

## கண்ணன் கேட்ட கீதை

யோகமில்லாமல் கீதார்த்தம் சொல்ல முடியாது என்று மறுத்த பின்பும், நட்பின் காரணமாக அர்ஜுனனிடம் தயையினால் "ஒரு சித்த புருஷன், கச்யபர் என்ற முனிவருக்கு, நான் முன்பு உனக்கு உரைத்த கீதைப் பொருளே உரைத்தான்; அதை நான் கேட்டேன்! கேட்டதை இப்போது உனக்குச் சொல்கிறேன்!" என்று கற்பித்துக் கொண்டு அனு கீதை உபதேசம் நிகழ்கிறது.

யோகமில்லாவிட்டால், முன்பு தானே உரைத்ததென்றாலும் அதனை மீண்டும் தான் கேட்டுத் தான் உணர வேண்டும் என்று கண்ணன் இங்குக் காட்டுகிறான்; இதனால் முன்பு கீதையில் உரைக்கப்பட்ட மகிமை எல்லாம் "எனக்கு வேறான உத்தம புருஷனுடயன" என்று உணர்த்துகிறான்.

யோகம் என்பது சிவனருளோடு சேர்க்கை; இது இடைவிடாத சிவ த்யான பாவத்தால் ஏற்படுவது; "பச்ய மே யோகம் ஐச்வரம்" (என்னுடைய சிவனருட் சேர்க்கைப் பயனாகிய செல்வத்தைப் பார்!) என்று கீதையிலும் கண்ணன் கூறியுள்ளான்.

## கண்ணன் சிந்தித்த கீதை

ஓர் அந்தணன், தன்னை வினவிய ஓர் அந்தணப் பெண்ணுக்கு உரைத்த உபதேசம், தான் மனனம் செய்து வைத்திருந்த கீதார்த்தம் என்று மீண்டும் அனுகீதையில் கண்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறான்; இறுதியில் அர்ஜுனனுக்கு விடையாக, 'என் மனமே அந்த அந்தணன்; என் அறிவே அந்தப் பெண்; நானே க்ஷேத்ரக்ஞன்' என்று கண்ணன் கூறி முடிக்கிறான்.

கண்ணன் இங்குத் தெளிவாகத் தன்னை க்ஷேத்ரக்ஞன் (உயிர்) என்று கூறுவதால், க்ஷேத்ரம் (பாசம்) மற்றும் க்ஷேத்ரக்ஞன் (பசு) இரண்டிற்கும் வேறான பதியாகிய பரம் பொருள் உண்டு என்பதையும், அதன் மகிமையே முன்னர் கீதையில் யோகத்தால் தன் மகிமையாகக் கூறப் பட்டதாகவும், அதனையே தான் மனனஞ் செய்ததாக உரைப்பதால் அம் மகிமை தனக்கு அன்னியமான உத்தம புருஷனுடையது என்றும் காட்டுகிறான்.

## கண்ணன் தெளிந்த கீதை

தான் சிரவண மனனங்கள் செய்த சிவ ஸ்வரூபத்திலேயே மனம் தொடர்ந்து ஈடுபடக் காரணமாகிய நிலைத்த பக்தி வேண்டி, அதன் மகிமையையே இடைவிடாது அனுசந்தானம் செய்து தெளிந்ததாகக் கண்ணன் கூறுகிறான். இங்ஙனம் தான் தெளிந்து உணர்ந்த கீதார்த்தம், ப்ரம்மா சில ரிஷிகளுக்கு உரைத்த உண்மைகளை, ஒரு குரு தன் சிஷ்யனின் கேள்விகளுக்கு விடையாக உரைத்ததாகக் கண்ணன் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறான்! இவ்வாறு பலரும் பல நேரங்களில் தான் உரைத்த கீதார்த்தத்தையே உப்தேசித்ததாகக் காட்டுவதால் அந்த கீதார்த்தம் (பழம் பொருளான) சிவமே என்று மறை பொருளாக வலியுறுத்தப்படுகிறது.

## காரண, காரிய ப்ரம்மங்கள்

கண்ணனைப் போல் எவரும் கேட்டும், சிந்தித்தும், தெளிந்தும் உணரத்தக்க கீதைப் பொருளே முன்னர் யோகத்தால் கண்ணனால் அர்ஜுனனுக்குப் போர்க்களத்தில் உரைக்கப்பட்டது; ஆயினும் அச்சமயம் அர்ஜுனன் உத்தம அதிகாரியாக இல்லாத காரணத்தால், "தஸ்மாத் யுத்யஸ்வ" (ஆகவே போரிடு!) என்ற அல்ப ப்ரயோஜனத்தையே அது முடிவாகக் கொண்டிருந்தது!

ஆனால், தற்போது அனுகீதையில், கண்ணன், "நான் சிவபெருமானிடத்தில் மனதைச் செலுத்திய காரணத்தாலேயே எனக்கு க்ரந்திமோக்ஷம் ஏற்பட்டது" என்று தெளிவாக உபதேசித்து, அர்ஜுனனையும் பரம ப்ரயோஜனமாகிய அச் சிவ த்யானத்தில் ஈடுபடுத்துவதைக் காண்கிறோம்.

ஆகவே அனுகீதை இன்றிக் கீதையின் உண்மைப் பொருள் விளங்காது என்ற காரணத்தாலேயே மகாபாரதத்தில் அனுகீதை இடம் பெறுகிறது.

மேலும் அனுகீதையின் மூன்றாவது உபாக்யானத்தில், ப்ரம்மா, தன்னையும் விஷ்ணுவையும் ப்ரம்மமயம் என்று கூறுவதால், மய என்ற விகுதிப் பொருளால், மூவரும் ப்ரம்மத்தின் காரியம் (அ) காரிய ப்ரம்மங்கள் என்று காட்டப் படுகிறார்கள். மூவருக்கும் முதல்வனாகிய சிவ பெருமானே காரண ப்ரம்மம் ஆவார்.

காரியத்தில் காரணம் காணப்படும் என்ற சாஸ்த்ர த்ருஷ்டியைத் தழுவியே "எல்லோருடைய இதயத்திலும் நானே இருக்கிறேன்" என்று கீதையில்

கண்ணன் கூறியுள்ளார். இது ப்ரதர்தனனுக்கு இந்திரன் கூறியது போன்றதாகும்.

[ப-வி] சிவயோகத்தால், அத்வைத பாவனையால், உயிர் தன்னைச் சிவமாகவே உணரும் என்பதைத் "தன்னைக் கண்ட என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் ஆகிய ஈசன்" என்ற சேரமான் திருவாக்கினால் தெளிந்து கொள்க!

**இறுதியாக, கீதை காட்டும் பாதையை நாம் புரிந்து வைத்திருக்க வேண்டும்:-**

நவீனர்கள், "கர்மண்யேவ அதிகாரஸ்தே மா பலேஷு கதாசன" (பலனைக் கருதாது கருமங்களைச் செய்து வருக!) என்பதே கீதை உபதேசம் என்பார்கள்.

வைணவர்கள், "ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" (எல்லா ஈர்ப்புகளையும் விடுத்து என்னை (கண்ணனை) மட்டும் தஞ்சம் புகு!) என்பதே கீதையின் சாரம் என்பார்கள்; இதனைச் சரம ச்ருதி (இறுதி வேதம்) என்றும் சொல்வார்கள். இவ்விரண்டும் இடைப்பட்ட உண்மைகளே ஆகும். முதலாவது இருவினை ஒப்பிற்கு ஏதுவாகும்; இரண்டாவது, மூர்த்தத்தை மூர்த்திமானைப் போல் பாவிக்கும் பாவனைப் பலத்தால் மேலான சக்தி (அருள்) நிபாதம் ஏற்பட ஏதுவாகும்.

கீதா ரஹஸ்யம் என்பது சிவதத்வ விவேகமே ஆகும். "தமேவ சரணம் கச்ச ஸர்வ பாவேன பாரத!" (எல்லா விதங்களாலும், வழிகளாலும் ஈஶனையே சரணம் புகு) என்பதே அது!.

எல்லா விதங்களாவன - குரு, லிங்க, ஜங்கம வழிபாடுகள் 'உபாஸனா த்ரைவித்யாத்' என்ற ப்ரம்ம சூத்திரத்திற்கு நீலகண்டாசாரியர் வகுத்த உரையினால் இது புலனாகும்;

எல்லா வழிகளாவன - சரியை, கிரியை, யோகம், ஞானம்;

சரணம் புகுதலாவது - ஜீவ போதத்தைக் கைவிடுதல், அதாவது, ஞாதா தன்னை ஞேயத்துள் ஒடுக்கிக் கொள்ளுதல்; இதுவே **நான் எனில் தான் எனும் ஞானம்** என்று தேவாரத்தில் பேசப்பட்டது.

சிவதத்வ விவேகம் என்பதே மேலான முக்தி ஸாதனம் என்பதும், சிவதத்வ விவேகம் அன்றாட வாழ்வில் எளிதில் அனுஷ்டிக்கத் தக்கதே (most practical) என்பதும் கீதையின் மெய்ப்பொருளாகும்.

சிவதத்வத்தை நினைத்தபடியே இருப்பதே முக்தி நிலையாகும். மறவாமையால் அமைத்த மனக்கோயிலே திருக்கயிலை ஆகும்.

**இருவருக்கும் வணக்கம்**

வ்யங்க்ய மார்க்கத்தினால் எவ்விடத்தும் த்வனிக்கும் படி, மகாபாரதம் முழுமையும் சிவ உத்கர்ஷ சிந்தனையை அள்ளித் தெளித்துள்ள வியாசரையும், அதற்குச் சாட்சியாக அமைந்துள்ள கண்ணனையும் வணங்குவோம்!

**சிவமயம்.**

